வாரைப்போலே அந்யபரதைக்கு உடலாகவொண்ணுது' என்று, எல்லாலோகங்களுக்
கும் வேண்டும் ஸம்விதாநம் தன்ஸங்கல்பத்தாலே செய்து, பின்னையாயிற்
வெண்ணெய் அமுதுசெய்தது. [உலகேழ் தன்னுள் ஒடுக்கித் தயிர்வெண்ணெயுண்
டானை] கர்ப்பிணிகள் வயிற்றில் பிள்ளைக்கீடாக போஜநாதிகள் பண்ணுமாபோலே,
உள்விழுங்கின லோகங்களுக்கு ஜீவநமாகத் தயிர்வெண்ணெயுண்டான். ஸர்வேச்வரனு
யிருந்து வைத்து, ஆச்ரிதஸ்பர்சமுள்ள த்ரவ்யத்தாலல்லது செல்லாதபடி யிருக்குமவனு
யிற்று; (ஸர்வஸ்ய ஜகத: பாலௌ வத்ஸபாலௌபபூவது:) என்னுமாபோலே. [தடங்
குருகூர்ச்சடகோபன்] (ப்ருந்தம்ப்ருந்தமயோத்யாயாம்) என்கிறபடியே 'பெருமாளு
டைய திருவபிஷேக மங்கள மஹோத்ஸவத்தைக் காணவேணும்' என்று நாடடையத்
திரண்டு கிடந்தாற்போலே, இவர் 'ஆத்மாத்மீயங்கள் வேண்டா' என்று கழித்திருக்கிற
இருப்பைக் காண்கைக்காகத் திரண்ட ஸ்ரீவைஷ்ணவ ஜநத்துக்குஅடைய இடம்
போரும்படியான பரப்பையுடைத்தான திருநகரிக்கு நிர்வாஹகரான ஆழ்வார். [செயி
ரில் சொல்லிசைமாலை] 'செயிர்' என்று குற்றம்; 'இல்' என்று இல்லாமை: குற்றமின்
றிக்கேயிருக்கை. அதாவது 'ஆத்மாத்மீயங்கள் வேண்டா' என்ற வார்த்தையில் புரை
யற்றிருக்கை. [வயிரஞ்சேர்பிறப்பறுத்து] இவர் 'வேண்டா' என்று கழித்தாலும்
விடாதபடி காழ்ப்பேறிக்கிடக்கிற ஸம்ஸாரத்தைக் கழித்து. [வைகுந்தம் நண்ணுவரே]
ஒருடம்பாய், 'இதுதானும்வேண்டா' என்று கழிக்கும்படியான இவ்வுடம்பை விட்டு,
(ஸஏகதா பவதி த்ரிதாபவதி) என்கிறபடியே, அவனுடைய ஸங்கல்பாதீநமாகவும் அத
டியான தன்ஸங்கல்பாதீநமாகவும் அநேகசரீர பரிக்ரஹம்பண்ணி அடிமைசெய்யலாம்
தேசத்திலேபோய்ப் புகப்பெறுவர். பலபடியாலும் அடிமைசெய்யப்பெறுவர், அவன்
விரும்பினபடி இது என்று அறியாதேயிறே இவர்தாம் வேண்டா என்கிறது. ... (11)

**திருவாய்மொழி நூற்றந்தாதி** }

ஏறுதிருவுடையவீசனுகப்புக்கு*
வேறுபடில்என்னுடைமைமிக்கவுயிர்*—தேறுங்கால்
என்தனக்கும்வேண்டாவெனுமாறன் தாளை நெஞ்சே!*
நந்தமக்குப்பேறுகநண்ணு. (38)

ஆழ்வார் திருவடிகளே சரணம்,
எம்பெருமானார் திருவடிகளே சரணம், ஜீயர் திருவடிகளே சரணம்.

---

## ஒன்பதாந் திருவாய்மொழி - நண்ணுதார்: ப்ரவேசம்.

'உடம்பு வேண்டா, உயிர் வேண்டா' என்று இவற்றை உபேக்ஷித்துப்பார்த்தார்.
தாம் 'வேண்டா' என்றவாறே தவிருமாகக்கொண்டு; அவை தவிர்ந்தனவில்லை; ஒன்றைப்
பெறுகைக்கேயன்றிக்கே முடிகைக்கும் உன் தரவு வேணுமாகில் அத்தைத்தந்தருள
வேணுமென்கிறார். இவ்வமங்கள சப்தத்தைத் திருமுன்பே விண்ணப்பஞ்செய்யவேண்
டும்படியாகக் காணும் இவர் ஸம்ஸாரத்தை வெறுத்தபடி, எம்பார், 'உன்னைப்பிரிந்
திருந்து படுகிற க்லேசத்தினளவல்ல உன்னையொழியப் புறம்பே பேறும் இழவுமாயிருக்
கிற ஸம்ஸாரிகள் நடுவேயிருக்கிற இருப்பால் படுகிற க்லேசம்; இத்தைத் தவிர்த்தருள
வேணுமென்கிறார்' என்று அருளிச்செய்வர். (உத்பபாத கதாபாணி:) ராவணனோடு



பொருந்தாமை பிறந்தபின்பு, நெருப்புப்பட்ட தரையில் கால்பாவாதாப்போலே அவ்
விடம் அடிகொதித்துப் போந்தானாயிற்று; (கதா) அங்குள்ளாரில் (நகமேயம்) என்னு
து தடியொன்றுமேயாயிற்று. (சதுர்ப்பி:) அதுவும் எடுத்துத் தோளிலே வைக்க
வேணுமே. அதுவும் வேண்டாதார் நால்வருமேயாயிற்று. இத்தால் ஒருவன் 'பகவத்
விரோதத்திலே நிலைநின்றான்' என்று அறிந்தால் தன்னைக்கொண்டு அகலவிறே அடுப்
பது. ஆழ்வான் அங்ஙனன்றிக்கே, "ஏறாளுமிறையோ"னில் தம்முடைய ஆற்றாமைக்குக்
கூட்டாவார் உண்டோ? என்று லோகவ்ருத்தாந்தத்தை அந்வேஷித்து ஸம்ஸாரிகளைப்
பார்த்தார்; அவர்கள், தாம் இவ்விஷயத்தில் ப்ரவணராயிருக்கிறாப்போலே சப்தாதி
விஷயங்களிலே ப்ரவணராய், அவற்றினுடைய பேறிழவுகளே லாபாலாபமாம்படி
யிருந்தார்கள்; வாளேறுகாணத் தேளேறுமாய்ந்து, அத்தைக்கண்டவாறே தம் இழவை
மறந்தார்; இவர்களுடைய இழவே நெஞ்சிலே பட்டது; ஸர்வேச்வரனைப் பார்த்தார்:
அவன் ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தியாய்ப் பரமோதாரனாய் எல்லாருடைய ரக்ஷணத்திலே
தீக்ஷித்திருக்குமவனாய் ஸர்வாபராதஸஹனாய் ஸர்வநியந்தாவா யிருந்தான்; அவன்படி
இதுவாயிருக்க, இவை இப்படி நோவுபடுகைக்கு இவ்விடம் தன்னரசுநாடோ? என்று
பார்த்து, 'நீ ஸர்வேச்வரனாய் பரமக்ருபாவானாய் ப்ராப்தனுமாய் இவற்றின் க்லேசம்
அறிந்து பரிஹரிக்கைக்கு ஈடான ஜ்ஞாநசக்தியை யுடையையுமாயிருக்க, இவை இங்ங
னே கிடந்து நோவுபடுகை போருமோ? இவற்றைக் கரைமரஞ்சேர்க்க வேணும்' என்று
அவன் திருவடிகளைப் பிடிக்க, 'நம்மால் செய்யலாவதுண்டோ? இவை சேதநரானபின்பு
இவைதனக்கே ருசியுண்டாகவேணுமே; நாம் கொடுக்கிற இது புருஷார்த்தமாகவே
வேணுமே; புருஷன் அர்த்திக்கக் கொடுக்குமதிறே புருஷார்த்தமாவது; அசித்தாய் நாம்
நினைத்தபடி கார்யங்கொள்ளுகிறோமல்லோமே; இவற்றுக்கு நம்பக்கலிலே ருசி பிறக்
கைக்கு நாம் பார்த்து வைத்த வழிகளையடையத் தப்பினபின்பு நம்மாற் செய்யலாவ
தில்லைகாணும்; நீர் இத்தை விடும் என்று ஸமாதாநம்பண்ண, 'நீ பண்ணின இது பரி
ஹாரமாய் நான் ஸமாஹிதனாவது 'இவை தங்கார்யத்துக்குத் தாம் கடவவாய் நோவு
படுகிறன' என்று உன்னால் சொல்லலாமன்றன்றோ'? என்ன, 'இவை சேதநராகையாலே
இவற்றின் வாசியறியவேணுமென்று நம்மை ஒருதட்டும் சப்தாதிகளை ஒருதட்டுமாக
வைத்து உங்களுக்கு வேண்டிற்றொன்றைக் கொள்ளுங்கோள் என்ன, சப்தாதிகள்
இருந்த தட்டு தாழ்ந்திருக்கையாலே அத்தட்டை 'அமையும்' என்று பற்றிற்றின; நாமும்
இருந்தனையும்பார்த்து முடியாமைகாணும் கைவாங்கிற்று; இனி நம்மாற் செய்யலாவ
தில்லை; இனி நீரும் இத்தைவிடும்" என்ன, 'ஆகில், உன்னையொழியப் புறம்பே பேறும்
இழவுமாயிருக்கிற இவர்கள் நடுவில் நின்றும் என்னை முன்னம் வாங்கவேணும்' என்ன,
முன்பே உம்மை வாங்கினோமே; ஸம்ஸாரிகளோடு பொருந்தாதபடி பண்ணினோமாகில்,
ஸம்ஸாராநுஸந்தாநத்தாலே வந்த க்லேசமெல்லாம் போம்படி உம்முடைய இருப்பு
இதுகாணும்' என்று பரமபதத்தில் அயர்வறுமமரர்கள் அடிமைசெய்யப் பெரியபிராட்டி
யாரும் நாமுமாக வ்யாவ்ருத்தமாக இருக்கிற இருப்பைக் காட்டித்தந்து 'அங்கே உம்
முடைய நெஞ்சு ப்ரவணமாம்படி பண்ணினோமாகில், இனி உமக்குப் பேற்றுக்குக் குவா
லுண்டோ? நாம் செய்யவேண்டுவதென்?' என்ன, இவையிரண்டையும் அநுஸந்தித்து
தரித்து க்ருதார்த்தராய்த் தலைக்கட்டுகிறார்'' என்று பணிக்கும் * ('மையகண்ணாள்
மலர்மேலுறைவாளுறைமார்பினன் செய்யகோலத்தடங்கண்ணன் விண்ணோர் பெருமான்
தன்னை'' என்று கண்டு அநுபவித்தாரிறே.) ஆழ்வான் தான் ஓரிடத்தே வழிபோகா

நிற்க, ஒருஸர்ப்பம் தவளையைப் பிடித்துக் கூப்பிடாநிற்க, 'இது ஆர் அறியக் கூப்பி
கிறது!' என்று மோஹித்தானும்; இவ்வாழ்வான் ப்ரக்ருதிக்குச் சேருமே இவ
நிர்வாஹமும்.

முதற்பாட்டு. உன்னையொழியப் புறம்பே பேறும் இழவுமாயிருக்கிற இவர்கள்
நடுவில்நின்றும் நான் உன்திருவடிகளிலே வந்து கிட்டும்படி எனக்கு இச்சரீரவிச்
ஷத்தைப் பண்ணித் தந்தருளவேணும் என்கிறார்.

**நண்ணாதார்முறுவலிப்ப நல்லுற்றார்கரைந்தேங்க***
**எண்ணாராத்துயர்விளைக்கும் இவையென்னவுலகியற்கை?***
**கண்ணாளா! கடல்கடைந்தாய்! உனகழற்கேவரும்பரிசு?**
**தண்ணாவாதடியேனைப் பணிகண்டாய்சாமாறே.** (1

[நண்ணாதார்முறுவலிப்ப] பிறரநர்த்தங் கண்டு சிலர் உகக்கும்படியாவதே
இது என்ன விஸ்மயந்தான்! (ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம்) அர்ஜுநன் 'என் பரகுபர
கெடுவது என்று?' என்ன, 'நான் 'ஸர்வபூதஸுஹ்ருத்து' என்று அறிந்தவாறே நீயு
என்னோபாதி என்விபூதிக்குப் பரியத் தேடுவுகிகாண்' என்றானிறே. நண்ணாதாரென்று
சத்ருக்களுக்குப் பேர். ஒருவனுக்கு ஓரநர்த்தம் வந்தவாறே, அற்றைக்குமுன்பு வெ
றிலைதின்றறியார்களே யாகிலும் அன்றாக ஒருவெற்றிலைதேடித் தின்பது, ஒருடுப்பு
வாங்கி யுடுப்பது, சிரிப்பதாகாநிற்பர்களாயிற்று. [நல்உற்றார்] ஸர்வேச்வரனே நிரு
பாதிகபந்துவாய், அவனைப்பற்றினவர்களையே 'அவன்தமரெவ்வினையராகிலு மெங்கோ
னவன்தமரே' என்று, 'அவர்களை ஒருகாலும்பிரிகிலேன்' என்றிருக்கப்ராப்தமாயிருக்க
சரீரஸம்பந்தநிபந்தநமாக வருகிறவர்களை நிருபாதிகபந்துக்களாக நினைத்து அவர்களுக்கு
ஒன்றுவந்தவாறே, 'நினைதொறும் சொல்லுந்தொறும் நெஞ்சிடிந்துகும்' என்று இவ
பகவத்விஷயத்தை நினைத்தல் சொல்லுதல் செய்யப் புக்கால் படுவதெல்லாம் படாநிற்
பர்களாயிற்று. (ஸர்வபூதாத்மகே) 'கரைந்தேங்க, முறுவலிப்ப' என்ற இரண்டையு
மிறே (மித்ராமித்ரகதா குத:) என்றது, ராகத்வேஷங்களைப்பற்றி வருகையாலே, மைத்ரி
யோடு சாத்ரவத்தோடு வாசியில்லையிறே. (த்வந்த்வைர்விமுக்தாஸ்ஸுகது:கஸம்ஜ்
ஞை:) என்று 'ஸுகது:கங்கள்' என்று சில பேர்மாத்ரமேயிறே உள்ளது; இரண்டும்
துக்கமாயிறே இருப்பது. இரண்டாய்வரும் துக்கங்களையடையநினைக்கிறது. (ராமமேவ)
திருவயோத்யையிலுள்ளார், ஒருவரையொருவர் வேரோடே வாங்கிப் போகடவேண்
டும்படியான சாத்ரவம் அநுவர்த்தியாநிற்கச்செய்தேயும் எல்லாரும் ஒருமிடறாக அர்த்
தித்தார்கள்; அதுக்கு அடியென்? என்னில்; சாத்ரவம் நெஞ்சிலேபட்டு அவர்களை
நலியநினைத்தபோதாகப் பெருமாளை நினைப்பர்கள்; 'அவர்முகஞ்சுளியும்' என்னுமத்
தாலே அதின்கார்யம் பிறக்கப்பெற்றதில்லை. (புஷ்பாங்கராகைஸ்ஸமம்) என்றிறே இவ்
விஷயத்தில் கைவைத்தார் இருப்பது. ஸர்வேச்வரன் பெரியபிராட்டியாரோடு பரிமா
றும்போது மற்றுள்ள பிராட்டிமார், ஸ்ரக்சந்தநாதிகளோபாதி போகோபகரணகோடி
யிலே அந்வயித்துநிற்பர்கள்; அவர்களோடு இவன் கலந்தால் பிராட்டிதான் தன்
இடையிலும் முலையிலும் கலந்தாற்போலேயிருக்கும். 'திருமகளும் மண்மகளு மாய்ம
களும் சேர்ந்தால் திருமகட்கே தீர்ந்தவா றென்கொல்' அவர்களோடே இவன்கலந்
தால் பிராட்டிக்கே யற்றாயிருக்கும்; அதுக்கடி அத்தால்பிறக்கும் முகவிகாஸம்
அவள்பக்கலிலே காண்கையாலே. அல்பம் குறைநிக்யம் உள்ளவிடத்தேயும் (யதாயதா
ஹி கௌஸல்யா) என்கிறதிறே; ஸாபத்ந்யம்தோற்றுதபடி பரிமாறிப் போந்தாளிறே



ரவர்த்திக்கு. (யதாயதாஹி) காலந்தோறும் காலந்தோறும் அவன் நினைவுக்கு
டாகப் பரிமாறிப்போந்தாளாயிற்று தனக்கென்ன ஓர்ஆகாரமின்றிக்கே. சேஷம் பூர்
வத். [எண்ணாராத்துயர்விளைக்கும்] முறுவலிக்கிறதும், கரைந்தேங்குகிறதும், இரண்
 துயராய்த் தோற்றுகிறதாயிற்று இவர்க்கு. அந்தமில் பேரின்பத்துக்கு எல்லைகா
லும் துக்கத்துக்கு எல்லைகாணவொண்ணாதபடி யாயிற்று இருப்பது. அங்கு நிஷ்க்
ஷ்டஸுகமேயாயிருக்குமாபோலே இதுவும் நிரவதிகதுக்கமேயாய் இருக்குமாயிற்று.
ராஜ்யாத் ப்ரம்ச:) இத்யாதி. இவர்கள்படுகிற க்லேசத்தைக் கண்டு தன் க்ருபையாலே
வன் எடுக்கக்கைநீட்டினவிடத்திலே படுகிறபாடிறே இது. திருவபிஷேகம்பண்ண
ளிட்டவாறே, 'ராஜ்யம் எனக்கு வேணும்' என்றார்கள் சிலர். அத்தையிழந்தால்
டைவீட்டிலே யிருக்கப் பெற்றதாகிலுமாமிறே. 'என்மகன் ராஜ்யம்பண்ணவேண்டா,
க்ஷபுக்காகிலும் என்கண்வட்டத்திலே இருக்க அமையும்' என்றாளிறே ஸ்ரீகௌ
ல்யையார், (ஸீதா நஷ்டா) பிராட்டியும் தாமுமாய் ஏகாந்தமாகபுஜிக்கலாம் என்று
பார, இருவரும் இரண்டிடத்திலேயாம்படியாய் விழுந்தது. பிராட்டிக்குத் தனியிடத்
லே உதவப்புக்க பெரியவுடையாரையும் இழந்தது. (ராஜ்யநாசோபகர்ஷதி) என்றும்,
நவாஸோ மஹோதய:) என்றும்சொல்லிப்போந்தவற்றை இப்போது அநர்த்தமாகச்
சால்லுகிறதென்? என்னில்; ஆச்ரிதஸம்ச்லேஷத்துக்கும், ருஷிகளையெடுக்கைக்கும்
ன்றிறே போந்தது; அத்தோடே விரோதிக்கையாலே சொல்லுகிறார். பிராட்டியைப்பிரி
கையாலும்பெரியவுடையாரிழவுபலிக்கையாலும், இவற்றுக்கு அடியானவையும் இப்
பாது அநர்த்தமாய்த் தோற்றுகையாலே சொல்லுகிறார். இவ்விரண்டாலும் வரும் துக்
கங்களையடைய நினைக்கிறது, (நிர்த்தஹேதபி பாவகம்) பிரியாத இளையபெருமாளையும்
க்கவும் வற்றாயிறே இருக்கிறது. [இவையென்னவுலகியற்கை] உன்னையொழியப்
ம்பேயும் இந்தலோகம் பேறிழவாம்படி இது ஒரு லோகயாத்ரையை நீ பண்ணி
வைத்தபடி யென்? பிரானே! நான் பண்ணுகையாவதென்? இவர்கள் தாங்கள் பண்
ன கர்மத்தினுடைய பலம் அநுவர்த்திக்கிற இத்தனையன்றோ? நம்மால் வந்ததன்று
ணும் என்று பகவதபிப்ராயமாக, மேல்சொல்லுகிறார்:

[கண்ணாளா] இவைபண்ணின கர்மம் தனக்கே யநுபவிக்க வேணுமாயிற்ற
கில், உன் க்ருபைக்குப் புறம்பு விஷயம் எங்கே? க்ருபாவானை "கண்ணுடையவன்"
னைக் கடவதிறே. அன்றிக்கே கண்என்று இடமாய், அத்தால் * அகலிட மென்றபடி
ய்; இது ஏதேனும் தன்னரசு நாடோ? நீ நிர்வாஹகனா யிருக்க இவை ஸ்வரூபவிரோ
களிலே ப்ரவர்த்திக்கிறதென்? கண்ணென்று நிர்வாஹகனுக்கும் பேர். தாந்தாம்
ழ்த்துக்கொண்ட கர்மம் தாந்தாம் அநுபவிக்கவேண்டாதபடி நாம் உதவ எங்கே
ண்டீர்? என்ன; 'ஒருவெள்ளமன்றோ' என்று உதாஹரணம் காட்டுகிறார்: [கடல்
டைந்தாய்] துர்வாஸச்சாபத்தால் வந்த அநர்த்தத்தைத் தப்புகைக்கு, ப்ரயோஜநாந்தர
ர்க்கும் அரியனசெய்து உதவுமவனன்றோ. அவர்களுக்கு இச்சையுண்டு; அநிச்சுக்
ளுக்கு நம்மாற் செய்யலாவதுண்டோ? என்ன, ஆகில் இவர்கள் நடுவிராதபடி என்னை
ன் திருவடிகளிலே வரும்படி பண்ணவேணும்; [உனகழற்கேவரும்பரிசு] விலக்கடி
ரில் போகாமே, ப்ராப்தமுமாய் போக்யமுமான உன் திருவடிகளிலே வந்து கிட்டுவ
காரு ப்ரகாரம். இவர்க்குக் காற்கூறு இச்சையுண்டாயிருந்தபடியாலே, 'அப்படிசெய்
கிறோம்' என்றான் ஈச்வரன். [தண்ணாவாது] தண்ணாக்கையாவது தாழ்க்கை. தாழாது
செய்கிறோம்' என்று ஆறியிருக்கவொண்ணாது; செய்துகொண்டு நிற்கவேணும். இப்படி

பதறிச்செய்ய வேண்டுகிறதென்? நமக்கென்ன, [அடியேனை] ஸ்வரூபஜ்ஞாநத்தா
ஸம்ஸாரிகளோடு பொருந்தாத என்னை. [பணிகண்டாய்சாமாறே] பணிக்கைய
சொல்லுகை; சொலவு நினைவோடே கூடியிறே இருப்பது. சாமாறு பணிக்கவேணு
உனக்கு ஒருசொலவு; அடியேன் பெறுகிறது ஸத்தை. [சாமாறே பணி] சரீரவிச்
ஷத்தைப் பெறும்படி பார்த்தருளவேணும்; கேவலரைப்போலே இவ்வளவை அபேக்ஷி
கிறதென்? என்னில்; (வரம் ஹுதவஹஜ்வாலாபஞ்ஜராந்தர்வ்யவஸ்திதி: ! நசௌ
சிந்தாவிமுகஜநஸம்வாஸவைசஸம்) என்கிறபடியே, இவர்கள் நடுவிருக்கிற இருப்பு
தவிருகைதானே இப்போது தேட்டமாகையாலே. காட்டுத்தீயில் அகப்பட்டவனுக்
நீரும் நிழலுமிறே முற்படத் தேட்டமாவது. பின்பிறே போக்யாதிகளில் நெஞ்சுசெ
வது; அப்படியே இப்போது இவர்கள் நடுவிருக்கைக்கு அடியான சரீரவிச்லேஷத்தை
பிறப்பிக்கவேணுமென்கிறார். ... ... ... ...

இரண்டாம்பாட்டு. "எண்ணாராத்துயர்" என்று திரளச்சொன்னார், முதற்பா
டிலே; அவற்றிலே சிலவகைகளைச் சொல்லி விஷண்ணராய், 'இவர்கள் து:கத்தை
போக்காயாகில் என்னை உன் திருவடிகளிலே அழைத்தருளவேணும்' என்கிறார்.

**சாமாறும்கெடுமாறும் தமருற்றார்தலைத்தலைப்பெய்து***
**ஏமாறிக்கிடந்தலற்றும் இவையென்னவுலகியற்கை?***
**ஆமாறொன்றறியேன் நான் அரவணையாய் அம்மானே!***
**கூமாறேவிரைகண்டாய் அடியேனைக்குறிக்கொண்டே.**

[சாமாறும் கெடுமாறும்] சாம்படியும் கெடும்படியும்: இதுக்குமேற்பட இவ
றிலே சிலப்ரகாரங்களு முண்டோ? என்னில்; உருவ ஒருபடிப்பட ஜீவிக்கக்கடவனு
வும், தன்னோடொக்க ஜீவிப்பாரை அழியச்செய்யக்கடவனாகவும் கோலிக்கொண்
போராநிற்க, நினைவற முடிந்துகொடு நிற்கும்படியும்; நாலு சின்னம் கைப்பட்டவா
'நமக்கு இனி உள்ளதனையும் ஜீவிக்கைக்கு ஒருகுறையில்லை' என்று நினைத்திருக்க
செய்தே, அத்தையிழந்து க்லேசப்பட்டுக் கூப்பிடும்படியும் இவை. இவர்கள் இப்ப
நோவுபடுகைக்கு வேறே சில உண்டாயிற்று; "நின்னலாலிலேன்காண்" என்று
"பலநீகாட்டிப்படுப்பாயோ" "இன்னம்கெடுப்பாயோ" என்றும் பகவத்லாபம் விநா
ஹேது வென்றும். இதரவிஷயதர்சநம் அநர்த்தஹேது வென்றுமாயிற்று இவர் இரு
பது. இவர்கள் இவையொழிய விநாசமும் அநர்த்தமும் எங்கே தேடிக் கொண்டார்கள்
"என்னொருவர் தீக்கதிக்கண் செல்லும்திறம்" என்னுமவர்களிறே இவர்கள்
(குருஷ்வ) என்றும், (யஸ்த்வயாஸஹ ஸஸ்வர்க்க:) என்றும் இவை விநாசமும் அநர்த்த
மாகவிறே இவர்கள் நினைத்திருப்பது. [கெடுமாறும்] தன் விநாசத்தையும் இசையு
கையிலகப்பட்ட த்ரவ்யம் தப்பினால்; அத்தையேயிறே இவன் தஞ்சமாக நினைத்திரு
பது. ஒருத்தனை 'ராஜத்ரோஹி' என்று கையையும் காலையும் தறிக்க, இவனை வினவ
புகுந்தவர்கள், இப்படிப்பட்டதாகாதே' என்ன, 'ஆயிரம், ஐந்நூறென்று சிலகாசு
என்னுதே இவ்வளவோடே போயிற்று, உங்களநுக்ரஹமிறே' என்றானும். [தமருற்று
இதொழியவே வேறே "தமர்கள் தமர்கள் தமர்கள்" என்று ஒரு உறவுமுறை உண்
யிற்று இவர்க்கு; அங்ஙனன்றிக்கே, சரீரஸம்பந்தநிபந்தநமாக வந்தவர்களாய் 'ஜ்ஞா
கள்' என்றும், 'ஸம்பந்திகள்' என்றும் சிலரை உறவாக நினைத்து நிர்ப்பரராயிருப்ப
ளாயிற்று. [தலைத்தலைப்பெய்து] மேல்விழுந்து மேல்விழுந்து. [ஏமாறிக்கிடந்தலற்று
ஏவென்று ஏக்கமாய், மாறுகை தவிருகையாய், ஏங்காதே கூப்பிட்டென்னுதல்; அன்



, 'ஏமாற்றம்' என்று ஒருசொல்லாய், அதாவது துக்கமாய், துக்கித்துக் கிடந்து கூப்
ட்டு என்னவுமாம். 'ஏவென்று தெளிவு; ஏமாறுகை தெளிவழிகை' (என்று 'கலங்கிக்
ப்பிடா நிற்பர்கள்') என்று பிள்ளையமுதனார் பணிப்பர். "ஏமாற்றமென்னைத்தவிர்த்
ய்" என்னக்கடவதிறே. [இவையென்னவுலகியற்கை] இதொரு லோகயாத்ரை
ருக்கும்படியென்? ஜீவிக்க மநோரதியாநிற்க முடிவது; நாலுகாசு கையிலே யுண்டான
றே 'இது நமக்கு உண்டு' என்றிருக்க, அது நசித்துப்போவது; சரீரஸம்பந்தநிபந்தந
ய் வருகிறவர்களையே தனக்கு ஸர்வவிதபந்துவுமாக நினைத்து, இவற்றுக்கு ஒன்று
ந்தவாறே 'பட்டேன், கெட்டேன்' என்று கூப்பிட்டு அலற்றுகிற இதுவும் ஒரு லோக
த்ரையே பிரானே! என்கிறார். 'அவர்கள் என்படில் நல்லது உமக்கு? நீர் நம்மையே
சால்லிக்கூப்பிடும்படி பண்ணினோமே! "சீலமில்லாசிறிய"னில் கூப்பீடன்றோ உம்மது?
ன்ன. [ஆமாறொன்றறியேன்நான்] அவர்கள்தான் கூப்பிடுகிறது உன்னோடு ஸம்பந்த
ல்லையாயோ? ப்ரக்ருதியோடே யிருக்கையாலேயன்றோ, அது என்னைத் தவிர்த்தாயோ?
வ்வுடம்பு கிடக்கையாலே, 'இன்னதுக்கு நான் கூப்பிடப்புகுகிறேன்' என்று அறியா
ன்றேனோ? அன்றிக்கே, 'ஸம்ஸாரிகளுடைய இந்த துக்கநிவ்ருத்திக்கு விரகேதோ?
ன்று அறிகிறிலேனென்னுதல். 'நீ எனக்குப் பண்ணித்தந்த வாசி நான் இவர்களுக்குப்
ண்ணிக்கொடுக்கும் விரகேதோ?' என்று அறிகிறிலேன்.

[அரவணையாய்அம்மானே] இவற்றினுடைய ரக்ஷணார்த்தமாகத் திருவநந்தாழ்
ன்மேலே திருப்பாற்கடலிலே கண்வளர்ந்தருளி, இவற்றினுடைய ரக்ஷணம் உன்
ரும்படியான குடல்துடக்கையுடையவனே! மெய்யான குடல்துடக்கிறே இவற்றுக்கு
வனோடு. இவனுடைய பொய்யோடு மெய்யோடு வாசியற இவனுக்கு இரண்டும் உட
யிருக்கும் ரக்ஷிக்கைக்கு. [கூமாறேவிரை] ஸுலபனாய் இவற்றினுடைய ரக்ஷணார்த்த
கத் திருப்பாற்கடலிலே கூக்குரல் கேட்கைக்காகக் கிட்டிவந்து கிடக்கிற நீ, நான் உன்
ருவடிகளை வந்து கிட்டும்படி என்னை அழைத்துக்கொள்கையிலே விரையவேணும்.
ப்படி விரையவேண்டுகிறதென்? என்னில், [கண்டாய்] என்னைக்கண்ட உனக்கு
ரையாதே யிருக்கலாயிருந்ததோ? பாராயென்று தம் வடிவைக்காட்டுகிறார். (ஏஹி பச்ய
ராணி) என்னுமாபோலே. ஆனாலும் அநாதிகாலம் நீர் பிரியில் தரியாதே போந்த
ம்பும் உற்றாருமன்றோ என்ன, [அடியேனைக் குறிக்கொண்டே] இந்த லோகயாத்ரை
ல் செல்லாதபடியாயிருக்கிற என்வாசியைத் திருவுள்ளம்பற்றி யருளவேணும். உன்
ருவடிகளில் ஸம்பந்தமறிந்தவன்று தொடங்கி உன்னோபாதி பராநர்த்தம் பொறுக்க
ட்டாதபடியான என்வாசியைத் திருவுள்ளம்பற்றியருளவேணுமென்னுதல். "கூமாறே
ரைகண்டாய்" என்னுங்காட்டில் பராநர்த்தம் பொறுக்கமாட்டா ரென்னுமிடம்தோற்
மோ? என்னில்; இவையென்ன உலகியற்கையென்று இந்த லோகயாத்ரையைஅநுஸந்
த்து வெறுத்து, என்னை அங்கே அழைக்கவேணுமென்கையாலே தோற்றுமிறே. (2)

மூன்றாம்பாட்டு. ஆபிஜாத்யாதிகளெல்லாம் கிடக்க, இவைமுடிகிறபடியைக்
ண்டு பொறுக்மாட்டுகிறிலேன்; துக்கபந்தமில்லாத உன்திருவடிகளிலே அடிமை
கொள்ளவேணும் என்கிறார்.

**கொண்டாட்டும்குலம்புனைவும் தமருற்றார்விழுநிதியும்***
**வண்டார்பூங்குழலாளும் மனையொழியவுயிர்மாய்தல்***
**கண்டாற்றேனுலகியற்கை கடல்வண்ணா!* அடியேனைப்**
**பண்டேபோற்கருதாது உன்னடிக்கேகூய்ப்பணிகொள்ளே.** (3)

[கொண்டாட்டும்] முன்பு 'இன்னான்' என்று அறியவொண்ணாதபடி அவ்
வாய்ப் போந்தானொருவன் அல்பும் ஜீவிக்கப்புக்கவாறே 'முதலியார்' என்
போலே சொல்லுவர்கள். "பயிலுந்திருவுடையார்" என்றிறே தாங்கள் கொ
டாடும் விஷயம். [சூலம்புனைவும்] ஜீவிக்கப்புக்கவன்று தொடங்கி இவனுக்கு ஒரு
முண்டாகத் தொடுத்துச் சொல்லுவர்கள். [தமர்] 'அவன்தமர்' என்று இவர்கள்
குத் தமர் புறம்பேயிறே. முன்பு 'இவனோடு நமக்குஒருறவு உண்டாகச் சொல்லும்
நமக்கு சாலத்தண்ணிது' என்று போனவர்கள், இவன் ஜீவித்தவாறே உறவு சொல்
கொடுவந்து கிட்டுவர்கள். [உற்றார்] முன்பு 'இவனோடு ஸம்பந்திக்கை தரமன்று; நி
கேட்டோம்' என்று போனவர்கள் இப்போது 'இவனோடே ஒருஸம்பந்தம் பண்ணி
மாக்வல்லோமே' என்று ஆதரித்து மேல்விழாநிற்பர்கள். [விழுநிதியும்] நினைவி
றிக்கே யிருக்கச்செய்தே சருகிலே திரளும்போலே சீரிய நிதி வாராக்கைப்புகுரு
அதுக்குப் போக்கடி காணாமையாலே செய்வதறியாமை அத்தையிட்டு ஒருஸ்த்ரீ
ஸ்வீகரிக்கும். அவள்தான் வண்டார் பூங்குழலா ளாயிற்று. இவள்செவ்வி வண்
புஜித்துப்போமித்தனை போக்கித் தான் புஜிக்க மாட்டான். போகயோக்யதை யில்லா
பருவத்திலேயாயிற்று ஸ்வீகரிப்பது. சேலேய் கண்ணியரும் பெருஞ் செல்வமும் ந
மக்களும் மேலாத் தாய்தந்தையும் இவையெல்லாம் ஏகவிஷயமிறே தமக்கு. [ம
யொழிய] அவளுக்கும் தனக்கும் ஏகாந்தமாக அநுபவிக்கைக்கு. தன் இயற்றியெ
லாங்கொண்டு பலநிலமாக அகத்தை யெடுக்கும். [உயிர்மாய்தல்] இவை குறியழி
திருக்க, இவனைக் கூட்டோடேகொடுத்து. இப்படி பாரித்த தான் முடிந்துகொடு
கும். [கண்டாற்றேன் உலகியற்கை] இப்படிப்பட்ட லோகயாத்ரை என்றால் பொற
கலாயிருக்கிறதில்லை. [கடல்வண்ணா] இந்த லோகயாத்ரையின்படி யன்றிக்கே அ
வீக்கலாவதும் ஒருபடியுண்டே. இவர்கள் துக்காநுஸந்தாநத்தால் வந்த க்லேசங்
ச்ரமஹரமான உன்வடிவைக் காட்டியருளாய். [அடியேனைப் பண்டேபோல கருதா
'பொய்ந்நின்ற ஞானம்' த்தில் இந்நின்றநீர்மை யினியாமுறாமை என்றவள்வாக என்னை
திருவுள்ளம்பற்ற வொண்ணாது. இதர விஷயங்களினுடைய தோஷதர்சநம் பண்ண
சொல்லுகிறவளவன்றிறே. பகவத்விஷயத்தில் அவகாஹித்துச் சொல்லுகிறது. சிறு
கொண்டார், 'இவர்க்காகில் இது சோகைப்பல்லிபோலே பணியன்றோ என்றிரு
வொண்ணாது' என்றாராம். அன்றிக்கே, கீழ் உன்னைப்பிரிந்து நான் கூப்பிட்ட அவ்
வாக நினைக்கவொண்ணாது, பராநர்த்தங்கண்டு கூப்பிடுகிற இத்தை. [உன்இத்யா
உன் திருவடிகளிலே அழைத்து என்னை அடிமைகொண்டருளவேணும். உன் திருவ
களிலே அழைத்தாலும், அடிமைச்சுவடுஅறியிலிறே நான் மீளாதொழிவது; அ
பினபு, என்னை நித்ய கைங்கர்யங் கொண்டருளவேணும். [கூய்ப்பணி கொள்
சோற்றையிட்டுப் பணிகொள் என்னுமாபோலே. ... ... ...

நாலாம்பாட்டு. சேதநர், ஐச்வர்யத்தை விரும்பினால் அது விநாசஹேதுவா
காணாநிற்கச்செய்தே, திரியவும் அந்த ஐச்வர்யத்தை விரும்புகையே ஸ்வபாவமாம
யிருக்கிற இதுக்கு ஹேது ஏதோ? நான் இதுகண்டு பொறுக்க மாட்டுகிறிலே
'என்னை முன்னம் இவர்கள் நடுவில்நின்றும் வாங்கவேணும் என்கிறார்.

**கொள்ளென்றுகிளர்ந்தெழுந்த பெருஞ்செல்வம்நெருப்பாகக்***
**கொள்ளென்றுதமம்மூடும் இவையென்னவுலகியற்கை?***
**வள்ளலே! மணிவண்ணா! உனகழற்கேவரும்பரிசு***
**வள்ளல்செய்தடியேனை உனதருளால்வாங்காயே.**



[கொள்ளென்று இத்யாதி] இவன்தான் அர்த்தியாதிருக்கச்செய்தேயும், 'கொள்,
காள்' என்று மொண்டெழுபானைபோலே கிளர்ந்துவருகிற நிரவதிகஸம்பத்தானது.
நெருப்பாக] நிச்சேஷமாக நசிக்கவென்னுதல்; தனக்கு விநாசஹேதுவாக வென்னு
ல். ஐச்வர்யம் விநாசஹேதுவாகையாவதென்? என்னில், 'இவன் ஜீவிக்கிறான்' என்
ற இதுகேட்டுப் பொறுக்கமாட்டாமையிறே பிறர் இவனை அழியச்செய்வது. இப்படி
ச்வர்யம் விநாசஹேதுவாகக் காணச்செய்தேயும்' பிறர் இவனை 'கொள், கொள்' என்று
ரேரிக்க, தமோபிபூதனாய், துராசையாலே முன்பு விநாசஹேதுவான அத்தை ஸ்வீகரி
ாநிற்கும். திரியவும் அத்தை ஸ்வீகரிக்கிறது தமோகுணாபிபூதராயிறே. அன்றிக்கே'
காள்ளென்று ப்ரேரிக்கிறது மநஸ்ஸாகவுமாம்; அன்றிக்கே, 'இது விநாசஹேதுவாம்,
ன்றுஅறியச்செய்தேயும், தன்னுடைய ஹ்ருதயமானது தமோகுணாபிபூதமாய், அத்தைக்
காள் என்று ப்ரேரித்து இவனை ஸ்வீகரிப்பிக்கும் இதினுடைய பலம். (ஹதே பீஷ்மே
றதே த்ரோணே ஹதே கர்ணே மஹாரதே । ஆசா பலவதீ ராஜந் சல்யோ ஜேஷ்யதி
ாண்டவாந்) அதிரதமஹாரதரடையப் பட்டுப்போகா நிற்கச்செய்தேயும், பின்னையும்
ல்யனைக்கொண்டே பாண்டவர்களை ஜயிக்கப்பார்த்தானிறே துர்யோதநன. [இவை
யன்னவுலகியற்கை] இவை சிலலோகயாத்ரை இருக்கிறபடியே! [வள்ளலே] 'ஐச்வர்
ம் விநாசஹேது' என்னுமிடத்தை என்னெஞ்சிலே படுத்தி எனக்கு ஔதார்யத்தைப்
ண்ணினவனே! [மணிவண்ணா] மாணிக்கப்பண்டாரத்தையிறே ஔதார்யம்பண்
ிற்று. ஸாதநாநுஷ்டாநம், மற்றொன்றைப் பண்ணவன்றாயிற்று. அன்றிக்கே, ஐச்வர்
ாதிகளில் குத்ஸையைப் பிறப்பித்தது. பிடாத்தை விழவிட்டு வடிவழகைக் காட்டியா
ற்று. [உனகழல்இத்யாதி] ஜ்ஞாநலாபமாத்ரத்தால் போருமோ? ப்ராப்தியைப்பண்
ித்தரவேண்டாவோ? மயர்வற மதிநலமருளினவோபாதி துயரறுசுடரடிதொழு
தழப்பண்ணவேண்டாவோ? பசியைவிளைத்தால் சோறிடவேண்டாவோ? [வள்ளல்
சய்து உன் திருவடிகளிலே நான் வந்து கிட்டும்படியாக ஔதார்யத்தைப் பண்ணி
இவன் இப்பேற்றைப் பெறுவான்' என்று விஷயீகரித்து. [அடியேனை] 'பிறருடைமை
யையோ நான் நோக்கச்சொல்லுகிறது?' 'உன்னுடைமை) நசியாமல் நோக்கவேணும்,
ன்று ப்ரார்த்திக்கிற என்னை. [உனதருளால்] மயர்வற மதிநல மருளினவோபாதி,
ராப்திக்கு ஈடாயிருப்பதும் ஒரருளைப் பண்ணவேணும். [வாங்காயே] 'வாங்காய்' என்று
சித்ஸமாதியாலே சொல்லுகிறார், அதுக்கு அடி இத்தலையிலே பரமபக்திபர்யந்தமாகப்
றந்தாலும், பெறுகிறபேற்றின் கனத்தைப் பார்க்க, அத்தலையில் க்ருபையாலே பெற்ற
ாம்படி யிருக்கையாலே. ... ... ... ... (4)

அஞ்சாம்பாட்டு. ஜந்மஜராமரணாதிகளாலே நோவுபடுகிற ஸம்ஸாரிகள் நடுவி
நின்றும், இதுநடையாடாத தேசத்திலே அழைத்துக்கொண்டருளவேணுமென்கிறார்.

**வாங்குநீர்மலருலகில் நிற்பனவும்திரிவனவும்***
**ஆங்குயிர்கள்பிறப்பிறப்புப் பிணிமூப்பால்தகர்ப்புண்ணும்***
**ஈங்கிதன்மேல்வெந்நரகம் இவையென்னவுலகியற்கை?***
**வாங்கெனைநீமணிவண்ணா! அடியேனைமறுக்கேலே.** (5)

[வாங்குநீர்மலருலகில்] கார்யங்களுக்கெல்லாம் காரணத்திலே லயமாகக்கடவ
திறே; இவ்வருகுண்டான கார்யவர்க்கத்தையடையத் தன்பக்கலிலே வாங்காநின்
ுள்ள நீரிலே விஸ்த்ருதமாகாநின்றுள்ள லோகத்திலே யென்னுதல்; அப்யயபூர்
ிகையாயிறே ஸ்ருஷ்டி இருப்பது; அன்றிக்கே, வாங்குதல் வளைதலாய், நீராலே

சூழப்பட்டுத் திருநாபீகமலத்திலே பிறந்த லோகமென்றுமாம், [நிற்பனவும் திரிவ வும்] ஸ்தாவரங்களும் ஜங்கமங்களும் [ஆங்குஉயிர்கள்] அவ்வவசரீரஸ்த்தமான ஆத்ம கள், அன்றிக்கே, ஆங்குஎன்கிற இது மற்றோரிடத்திலே அந்வயிப்பதாக விட்டுவைத்து நிற்பனவும் திரிவனவுமான உயிர்கள் என்ருய், ஸ்த்தாவரஜங்கமாத்மகமான ஆத்ம கள். [பிறப்பு இத்யாதி] ஜந்மஜராமரணாதிகளாலே நெருக்குண்ணுநிற்பர்கள், ஸாரத்தில் வர்த்திக்கும் நாளித்தனையும், [இதன்மேல் வெந்நரகம்] இதுக்குமே போனால் கொடிதான நரகம். இந்த இருந்த நாள் மூலையடியே ஸுகாநுபவம்ப ணித் திரிந்தார்களாம்படி யன்றிறே, அங்குப்போனால் படும் துக்கம். ஸுகப்ராந்தி லும் உண்டு இங்கு; அங்கு நிஷ்க்ருஷ்டதுக்கமேயாயிற்று உள்ளது. உயிர்க்கழுவி வி மவன், பிபாஸையும் வர்த்தித்துத் தண்ணீரும் குடித்து த்ருப்தனு மோபாதியிறே இங்குள்ளவை; அதுவுமில்லை அங்கு. இதொரு லோகயாத்ரையைப் பண்ணிவைக்கு படியே! ஆனல், உமக்குச்செய்யவேண்டுவது என்? என்ன, [ஆங்கு வாங்கு என் (ச்ரியா ஸார்த்தம் ஜகத்பதி: ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர்பாகவதைஸ்ஸஹ என்கிறபடியே, ஏழுலகும் தனிக்கோல்செல்ல நீ விற்றிருக்கிறவிடத்திலே என்னைவா வேணும். [மணிவண்ணு] சப்தாதிவிஷயங்களிலே ப்ரவணனுய் அவற்றின் வடிவி துவக்குண்டிருக்கிற என்னை, "அவ்வடிவை நாய்க்கிடாய்" என்னும்படியான உன்வ வைக் காட்டிக்கொண்டு போகவேணும். "மனைப்பால் பிறந்தார் பிறந்தெய்தும் பேரின் மெல்லாம் துறந்தார்தொழுதாரத்தோள்" என்கிறபடியே, இவன்படியைக் கண்ட வேறொன்றும் பிடியாதிறே. [அடியேனை] உன்படியறிந்த என்னை, நீயும் அவ்வோல கமுமாயிருக்கிற இருப்பில் சுவடறிந்த என்னை. [மறுக்கேலே] ஜந்மஜராமரணாதிகளா நெருக்குண்கிற இவர்கள் நடுவேயிருந்து என்னெஞ்சு மறுகாதபடி பண்ணவேணு என்னைக் கலங்கப்பண்ணுதேகொள். தெளிவிசும்பிலே வாங்கியருளவேணும். [அ யேனை மறுக்கேலே] அஸாதாரணராய் சேஷபூதரா யிருப்பாரையுங்கொண்டு லீலா அநுபவிக்கக் கடவதோ?. ... ... ... (5)

ஆரும்பாட்டு. ஸம்ஸாரிகளுடைய பகவத்வைமுக்யாதி தோஷங்களை அநுஸ தித்து ஈச்வரனை இன்னுதாகை தவிர்ந்து, ஜீவ ஸார்த்தமாகப் பரஹிம்ஸைபண் ணுகிற ஸம்ஸாரிகள் நடுவினின்றும் என்னை உன்திருவடிகளிலே அழைத்தருளவேணுமென்கிறு

மறுக்கிவல்வலைப்படுத்திக் குமைத்திட்டுக்கொன்றுண்பர்*
அறப்பொருளையறிந்தோரார் இவையென்னவுலகியற்கை?*
வெறித்துளவமுடியானே! வினையேனையுனக்கடிமை*
யறக்கொண்டாய் இனியென்னாரமுதே! கூயருளாயே. (6)

[மறுக்கி இத்யாதி] க்ராமணிகள் த்ரவ்யார்ஜநம்பண்ணும்படி: 'ஸாது' என் தோற்ற வர்த்திப்பானொருவன், 'ஒருதேசத்திலே வர்த்தியாநின்றால் ஓரபாச்ரயத்தை பற்றியிருக்கவேணும்' என்று ஒருக்ராமணிபாடே சென்று சேரும்; 'இவன் ஸாது' என் தோற்றினவாறே 'உன்னை இன்றும் இன்றுமாக இன்னபடி சொன்னார்களி!' எ னும்; அவன் பீதனுய், 'இவன் நமக்கு ரக்ஷகன்' என்று விச்வஸித்தபடியாலே, 'அ குப்பரிஹாரமென்?' என்று இவன் தன்னையே கேட்கும்; 'உனக்கு ஒன்று வந்தால் சொ லலாவதில்லாதபடி என்னகத்திலே உனக்குள்ள அர்த்தத்தையும் போகட்டு உன்க்ஷே ரத்தையும் என்பேரிலே திரியவிட்டுவை' என்னும்; இப்படி இவன் நெஞ்சை மறு பண்ணி. [வல்வலைப்படுத்தி] இவனுக்கு இனி இவைகொண்டு தப்பவொண்ணுதப



பக்கலிலே அகப்படுத்தி. [குமைத்திட்டு] பின்பு இவனிட்டகாசு தன்னையடையத் பேரிலே செலவு எழுதிச் சிகைக்கடிப்பிக்கும். [கொன்று] 'இவன் இருக்குமாகில் நாள்வரையில் சிலரை ஆச்ரயித்துத் தொடரிலோ?' என்று, இவனை ஹிம்ஸிக்கும். ண்பர்] இப்படி செய்தால்தான் செய்வது வயிறுவளர்க்கையிறே. [அறப்பொருளை ந்து] 'தேஹாத் வ்யதிரிக்தமாயிருப்பதொரு ஆத்மவஸ்து உண்டு; நாம் இப்போது யிறவை அதிலேவந்தவாறே தட்டுப்படும்' என்று தர்மதத்த்வத்தையறிந்து. [ஓரார்] னுடைய நிரூபணத்திலே முதலிலே இழியார்கள். அன்றிக்கே, பரஹிம்ஸையில் றும் நீங்காரென்றுமாம். ஒருதல், ஒருவுதலாய், ஒருவுதல் நீங்குதலாய், அந்தப்பர ம்ஸையில் நின்றும் நிவ்ருத்தராகார். அன்றிக்கே, அர்த்தபுருஷார்த்த மொன்றையுமே விரும்பி, நன்மை தீமை நிரூபணம்பண்ணு ரென்னுதல். இது ஒரு லோகயாத்ரை க்கும்படியே பிரானே! [வெறி இத்யாதி] இஸ்ஸம்ஸாரிகள் நடுவேயிருக்கிற என்னை னுடைய போக்யதையைக் காட்டி அடிமைகொண்டாய், பரிமளிதமான திருத்துழா முடியிலே யுடையவனே! [வினையேனை] சப்தாதிவிஷய ப்ரவணராயிருக்கிற இவர் லே ஒருவனுய்ப் பிறக்கைக்கு அடியான பாபத்தையுடைய என்னை. நான் நின்ற க்குச் சேராதபடியான நின் திருவடிகளில் அடிமையை நிர்ஹேதுகமாக என்னைக் ண்டருளினுய். [இனி] அடிமைகொண்ட பின்பு. [என்ஆரமுதே] எனக்கு நிரதிசய ாக்யனானவனே! நான் இவர்கள் நடுவேயிருக்கிற இருப்பைவிட்டு உன் திருவடிகளிலே ம்படி அழைத்துக்கொண்டருளவேணும். அன்றிக்கே, [இனியென்] அவர்கள் ஒரு யாலும் அத்ருஷ்டத்தில் நெஞ்சுவையாரானபின்பு, நான் அவர்களநர்த்தத்துக்குக் ரந்ததுக்கு ப்ரயோஜநமென்? அத்தை விடலாகாதோ? என்னை முதல் அங்கே அழைத் கொண்டருளவேணும். ... ... ... ... (6)

ஏழாம்பாட்டு. அபேக்ஷிதம் அப்போதே கிட்டாமையாலே, 'பேறு தம்மதான பு தாமே யத்நம்பண்ணிவருகிறுர்' என்று நினைத்தானுகக்கொண்டு, 'ஸகலபதார்த் களும் த்வததீநமான பின்பு நீயே உன்னைக்கிட்டும்வழி பார்த்தருளவேணும்' என்கிறுர்.

ஆயேயிவ்வுலகத்து நிற்பனவுந்திரிவனவும்*
நீயேமற்றொருபொருளு மின்றிநீநின்றமையால்*
நோயேமூப்பிறப்பிறப்புப் பிணியேயென்றிவையொழியக்*
கூயேகொள்ளடியேனைக் கொடுவுலகங்காட்டேலே. (7)

[ஆயே] தாயே யென்றபடியாய், (மாதா பிதா) என்கிறபடியே எனக்கு ஸர்வவித துவர்க்கமுமானவனே! அன்றிக்கே, [இவ்வுலகத்து நிற்பனவும் திரிவனவும் நீயே யே] இந்த லோகத்தில் ஸ்த்தாவரஜங்கமாத்மகமான ஸர்வபதார்த்தங்களும், 'நீ' என் சொல்லுக்குள்ளேயாம்படி ப்ரகாரமாயற்று, நீ யொருவனுமே ப்ரகாரியாய். [மற் ருபொருளுமின்றி] (நேஹ நாநாஸ்தி) (ஆத்மைவாபூத் தத்கேந கம்பச்யேத்) என் சொல்லுகிறபடியே, அப்ரஹ்மாத்மகமாய் ஸ்வதந்த்ரமாயிருப்பதொரு பதார்த்தந் யாயிற்றில்லை யென்கிறது. [நீ நின்றமையால்] நீ இப்படி நின்றபின்பு. [நோயித் தி] சரீரத்துக்கு வந்தவற்றுக்கு சரீரியான ஆத்மா ஸுகித்தல் துக்கித்தல் செய்யுமோ தி, எனக்கு வந்தவற்றுக்கு ஸுகித்தல் துக்கித்தல் செய்வாய் நீயாம்படி ஸம்பந்த ண்டாயிருந்த பின்பு, ஜந்மநிபந்தனமான இவ்வ்யஸநங்களைக் கழித்து நோயும் பிணியு ன்று ஆதிவ்யாதிகள். [கூயேகொள்] 'இவன் தானே வருகிறுன்' என்றிராதே நீயே ழைத்துக்கொண்டருளவேணும். [கொடுவுலகம்] உன்னைவிட்டு சப்தாதிகளாலே

போதுபோக்கியிருக்கிறலோகம். [காட்டேலே] த்ருஷ்டிவிஷம்போலே, காணில்முடிவ... இந்தலோகயாத்ரை என் கண்ணுக்கு இலக்காகா தொழியவேணும் என்கையாலே இ... லோகயாத்ரை இவர்கண்ணில் பட்டதில்லையாயிருந்தபடி. மயர்வறமதிநல மருளினவ... பாதி ஸர்வசக்தியானவன் இத்தைக்காட்டில், காணுமித்தனை, ஆனால், "இவையெ... வுலகியற்கை" என்றத்தோடு சேரும்படியென்? என்னில், "பரஹிதம்" என்கிற பு... யாலே முன்பு அநுஸந்தித்தார்; 'இதுதான் என்னைவந்து கிட்டாதபடி பண்ணவேணு... என்கிறார் இதில் ... ... ... (7)

எட்டாம்பாட்டு. நாமே செய்யப்புக, நீர் 'வேண்டா' என்றவாறேயன்... தவிர்ந்தது; இதுக்கு நம்மைக் காற்கட்டவேணுமோ? என்ன, 'செய்யக்கடவதா... அது என்று செய்வது?' என்கிறார். 'எம்மாவீட்டுத் திறமும் செப்பம்' என்றுரே.

**காட்டிநீகரந்துமிழும் நிலம்நீர்தீவிசும்புகால்***
**ஈட்டிநீவைத்தமைத்த இமையோர்வாழ்தனிமுட்டைக்***
**கோட்டையினிற்கழித்தென்னை உன்கொழுஞ்சோதியுயரத்துக்***
**கூட்டரியதிருவடிக்கள் எஞ்ஞான்றுகூட்டுதியே?.** (8)

[காட்டி] ஐந்த்ரஜாலிகரைப்போலே; முன்பு தானேதானும்படி இவற்... யடையத் தன்பக்கலிலே உபஸம்ஹரித்து ஸத்த்வஸ்த்தமான ஜகத்தை, (தாதா யதாபூ... வமகல்பயத்) என்கிறபடியே, இத்தை யுண்டாக்கிக் காட்டி. [நீ கரந்துமிழும்] ஸ்ர... டாவான நீயே ப்ரளயம்வந்தவாறே உள்ளேவைத்து ரக்ஷித்து, அதுகழிந்தவா... வெளிநாடுகாண உமிழும். அன்றிக்கே, நீ கரந்து காட்டி, உமிழ்ந்து காட்டு மென்றுமா... இப்படி உண்பது உமிழ்வதான ப்ருதிவ்யாதிகளாலே, [ஈட்டி] திரட்டி. த்ரிவ்... கரணத்தைச் சொன்னபடி (ஸமேத்யாந்யோந்யஸம்யோகம் பரஸ்பரஸமாச்ரயா:) இ... தனித்தனியும் காரியத்தைப் பிறப்பிக்கமாட்டா; கூடினாலும் ஸம்ப்ரதாநமாய் நிற்... காரியம் பிறப்பிக்கமாட்டாது; செதுகையும் மண்ணையும் நீரையுங் கூட்டி குலாலாதிக... கடாதிகளைப்பிறப்பிக்குமாபோலே; பரஸ்பரம் காரணம் ஏகரூபமாய்நிற்கில் கார்யமும் ... ரூபமாயிருக்குமிறே; தேவாதிகார்யநாநாவித்யம் பிறக்கும்படி குணப்ரதாநபா... நிற்கும். இப்படி இவற்றைத் திரட்டி இவற்றாலே [நீ வைத்தமைத்த] நீ சமைத்... வைத்த. [இமையோர் இத்யாதி] ப்ரஹ்மாதிகள் வன்னியம்செய்கிற அத்விதீயமா... அண்டமாகிற கோட்டையினின்றும் என்னைப் புறப்படவிட்டு. கோட்டையாவ... புறம்புள்ளாரால் புகுரவொண்ணாததுமாய், உள்ளுள்ளாரால் புறப்படவுமொண்ணு... புக்கவிடமும் புறப்பட்டவிடமும் தெரியாதா யிருக்குமகிறே. (துரத்யயா) என்... னிறே தானும். [என்னை] இக்கோட்டையிலே யகப்பட்டுப் புறப்பட வழியறியாதி... கிற என்னை. (மாமேவ யே ப்ரபதயந்தே மாயாமேதாந்தரந்தி தே) என்று நீ சொன்... படியே உன்னையே பற்றின என்னை. உம்மை இத்தைக் கழித்துக்கொடுபோக... சொல்லுகிறது எங்ஙனே? என்ன, [உன்கொழுஞ்சோதியுயரத்து] அஸ்ப்ருஷ்ட ... ஸாரகந்தமாய் சுத்தஸத்த்வமயமாய் நிரவதிக தேஜோரூபமான பரமபதத்தி... [கூட்டரிய திருவடிக்கள்] ஸ்வயத்நத்தால் துஷ்ப்ராபமான திருவடிகளை, [... ஞான்று] (மாசுச:) என்று ஒருவார்த்தை சொல்லிலும், (ஸ்த்திதோஸ்மி) என்றிரு... லாயிறே இருப்பது; அப்படியே 'நான் கூட்டக்கடவேன்' என்று ஒருவார்த்தை அ... ளிச்செய்யவேணும். (ஆருரோஹ ரதம் ஹ்ருஷ்ட:) என்னலாம்படி, (பூர்ணே சதுர்த்த... வர்ஷே) என்கிறவோபாதி வார்த்தை அருளிச்செய்தருளவேணும். 'இத்தை...



...ழிக்கவேணும்' என்றிருக்கிற என்னை, நீ உகந்தாரைக் கொடுபோய் வைக்கும் தேசத்...லே, ஸர்வசக்தியான நீயே என்று கொடுபோய் வைக்கக்கடவை? இக்கோட்டை...ட்ட இவன்தானே கழிக்கவேணுமிறே. விரோதியைப் போக்கிலும் இவனைப்பற்ற...வேணும், தன்னைப்பெறிலும் தன்னாலே பெறவேணும்; (மாமேவ யே ப்ரபத்யந்தே) ...தமேவ சரணம்கச்ச) பிள்ளைதிருநறையூரரையர், 'ஒருகுருவி பிணைத்த பிணை ஒருவரால் ...விழ்க்கவொண்கிறதில்லை; ஒருஸர்வசக்தி, கர்மாநுகூலமாகப் பிணைத்த பிணையை ...வனைக் காற்கட்டாதே, இவவெலியெனும்பனை ஸம்ஸாரியால் அவிழ்த்துக்கொள் ...ப்போமோ? என்று பணிப்பர். ... ... ... ... ... (8)

ஒன்பதாம்பாட்டு. இவருடைய ஸம்ஸாராநுஸந்தாநத்தாலே வந்த வ்யஸநமெல் ...ம் திரும்படி, திருநாட்டிலிருந்த இருப்பைக் காட்டியருள, கண்டு அநுபவிக்கப் ...பெற்றேனென்று த்ருப்தராகிறார்.

**கூட்டுதிநின்குரைகழல்கள் இமையோரும்தொழாவகைசெய்து***
**ஆட்டுதிநீஅரவணையாய் அடியேனு மஃதுவறிவன்***
**வேட்கையெல்லாம்விடுத்தென்னை உன்திருவடியேசுமந்துழலக்***
**கூட்டரியதிருவடிக்கள் கூட்டினைநான்கண்டேனே.** (9)

[கூட்டுதி நின்குரைகழல்கள்] அளவிலிகளாகவுமாம், நீ உகந்தாரை உன் திருவடி...ளிலே சேர்த்துக்கொள்ளுதி. குரையென்று பெருமையாதல், ஆபரணத்வநியாதல். [இமையோர் இத்யாதி] ப்ரஹ்மாதிகளேயாகிலும், நீ நினையாதாரை வந்துகிட்டாதபடி ...ண்ணி யலேப்புதி. [அரவணையாய்] 'கூட்டுதி' என்றதுக்கு உதாஹரணம். [அடியே...னும் அதுவறிவன்] லோகவேதங்களிலே ப்ரஸித்தமான உன்படியை நானும் அறிவேன். ...றித்தபடிதான் என்? என்னில்; [வேட்கையெல்லாம் விடுத்து] எனக்கு உன்னை ...யாழிந்தவையா மத்தனையன்றோ ஆசைப்படுகைக்கு; உன் விபூதியில் நான் 'எனக்கு, ...னக்கு' என்னுதது உண்டோ? யாதானும்பற்றி நீங்கும் விரதத்தை நல்வீடுசெய்திலையோ? [உன்திருவடியே சுமந்துழல] பாஹ்ய விஷயங்களிலுண்டான ஆசையெல்லாம் உன் ...க்கலிலேயாய், உன்திருவடிகளையே நான் ஆதரித்து, அதுவே யாத்ரையாய்ச் செல்லும் ...டிக்காக. [கூட்டறிய இத்யாதி] யாவர் சிலர்க்கும் தந்தாமால் சேர்த்துக்கொள்ளவரிய ...திருவடிகளை நான்சேரும்படி என்னைச்சேர்த்துக்கொண்டாய் இது நான் கேட்டார்வாய்க் ...கேட்டுச் சொல்லுகிறேனல்லேன்; அநுபவத்தாலே சொல்லுகிறேன். ... (9)

பத்தாம்பாட்டு. கீழ்ப்பாட்டில், 'விடுத்து' என்றும், 'கூட்டினை' என்றும் ப்ரஸ்து...மான பேற்றை, ப்ரீத்யதிசயத்தாலே விட்டது இது, பற்றினது இது என்று வ்யக்த...மாக அருளிச்செய்கிறார்.

**கண்டுகேட்டுற்றுமோந்து உண்டுழலுமைங்கருவி***
**கண்டவின்பம்தெரிவரிய வளவில்லாச்சிற்றின்பம்***
**ஒண்டொடியாள்திருமகளும் நீயுமேநிலாநிற்பக்***
**கண்டசதிர்கண்டொழிந்தேன் அடைந்தேனுன்திருவடியே.** (10)

[கண்டு இத்யாதி] காட்சிக்குக் கருவியாயிருக்கும் கண், கேட்கைக்குக் கருவியா...யிருக்கும் செவி, ஸ்பர்சிததறிகைக்குக் கருவியாயிருக்கும் த்வகிந்த்ரியம், கந்தக்ரஹணத்...துக்குக் கருவியாயிருக்கும க்ராணேந்த்ரியம், ரஸனை ரஸாநுபவத்துக்குக் கருவியாயிருக்...கும், கண்டு, கேட்டு, உற்று, மோந்து, உண்டு, இப்படி இதுவே யாத்ரையாய்ப் போரு

கைக்கு ஸாமக்ரியாயிருக்குமிறே சக்ஷுராதி கரணங்கள். [ஐங்கருவிகண்ட வின்பம்] உழக்காலே யளக்குமாபோலே பரிச்சிந்நவஸ்து க்ராஹகமான இந்த்ரியங்களாலே அ பவிக்கப்பட்ட ஐஹிகஸுகம். ஆத்மாவுக்கு நித்யதர்மமாய் ஜ்ஞாநம், அதுதான் ஸங்குசி மாயிருக்கக்கடவது; கர்மபந்தநமாக ஸங்குசிதமாய், மநஸ்ஸடியாகப் புறப்பட்டு, பாஹ் யேந்த்ரியத்வாரா விஷயங்களை க்ரஹிக்கக்கடவதாயிறே இருப்பது. [தெரிவரிய வளவில் லாச்சிற்றின்பம்] இவ்வருகிலநுபவத்தைப் பற்றத் தான் தெரிவரியதாய் துர்ஜ்ஞே மாய், அளவிறந்து அவ்வருகில் பகவதநுபவத்தைப் பற்றத் தான் அளவிலியாய், அ வான ஆத்ம வஸ்துவைப்பற்ற வருகிற போகமாகையாலே ஸ்வரூபத: பரிச்சிந்நமாயிரு கிற ஆத்மாநுபவஸுகம். இவற்றை [ஒழிந்தேன்] விட்டேன். [சிற்றின்பம்] அ மில்பேரின்பத்துக்கு எதிர்த்தட்டானதிறே. விட்டது இதுவாகில் பற்றிற்றுஏது? என னில், [ஒண்தொடியாள் இத்யாதி] பெரியபிராட்டியாரும் நீயுமாய்ச் சேரவிருக்கிற உங் ளிருவருடையவும் அபிமாநத்தாலே ஒருவிபூதியாக அடங்கியிருக்கிற இருப்பைக்கண் டேன். தொடியென்பது முன்கைவளை. அதுக்கு ஒண்மையாவது இவளைக் கைகழியா திருக்கை. நித்யாநபாயிநி யாகையாலே, முன்பு ஒருகால் கழன்று பின்பு ஸாத்மிக்க வேண்டும்படி யிருப்பதில்லையிறே. "சங்குதங்கு முன்கை நங்கை" என்னக்கடவதிறே [திருமகளும்நீயுமே] இப்படியிருக்கிற பிராட்டியும், அவள் தானுங்கூட "இறையும் அகலகில்லேன்" என்னும்படியிருக்கிற நீயும். [நீயுமே நிலா நிற்ப] இருவருடையவும் அபிமாநத்துக்குள்ளே த்ரிபாத்விபூதியாக அடங்கிக்கிடக்கும். (நாநயோர்வித்யதேபரம்) என்னுநிற்க, வாசல்தோறும் ஈச்வரர்களிறே இங்கு. [நிலாநிற்பக் கண்டசதிர்] உங்களிரு வருடையவும் அபிமாநத்தாலே கிடக்குமதுவே யாத்ரையாம்படி நீ பார்த்துவைத்த, சதி ருண்டு நேர்பாடு; (வைகுண்டே) இத்யாதிப்படியே நீ பார்த்துவைத்த வாய்ப்பு, அ தைக்கண்டு. [உன் திருவடியே அடைந்தேன்] "அநித்யஸம்ஸாரிகளோடே ஒரு கோவை யாய் உன் திருவடிகளிலே அடிமைசெய்யவேணும்" என்று உன் திருவடிகளைக்கிட்டி னேன். இது நான் உற்றது, கீழ்ச்சொன்னவை நான் விட்டது. ஒண்டொடியாள் திருமக ளும் நீயுமே யென்னும் காட்டில் நித்யவிபூதியோகத்தைச் சொல்லிற்றுமோ? என்னில்; "அடியார்கள் குழாங்களை உடன் கூடுவது என்றுகொலோ?" என்று இவர் சொல்லுகை யாலும் (பக்தைர்ப்பாகவதைஸ்ஸஹ) என்று ப்ரமாணாந்தரங்களுண்டாகையாலும், இனித்தான் "நிற்பனவும் திரிவனவும் நீயே மற்றொருபொருளுமின்றி" என்று வைத்து 'கொடுவுலகங்காட்டேல்' என்றவோபாதி, அவர்களிருவருமே என்ற விடத்தில் அவர்களபிமாநத்திலே அடங்கிக் கிடப்பதொரு விபூதியுண்டாகச் சொல்லத்தட்டில்லை யிறே. அதுதான் இதுவானாலோ? என்னில்; அஸாதாரண விக்ரஹத்தோடே, (பவாம்ஸ் துஸஹ வைதேஹ்யா) என்கிறபடியே தானும் பிராட்டியுமாக இருந்து (க்ரியதாம்) என்று சொல்லுகிறபடியே இளையபெருமாளை அடிமைகொண்டாற்போலே, இவரை அடிமைகொள்ளுவதொரு தேசவிசேஷத்திலேயாயிருக்குமிறே. ... ... (10)

நிகமத்தில், இத்திருவாய்மொழி அப்யஸித்தாரை இதுதானே அவன் திருவடி களிலே சேர்க்கும் என்கிறார்,

**திருவடியைநாரணனைக் கேசவனைப்பரஞ்சுடரைத்***
**திருவடிசேர்வதுகருதிச் செழுங்குருகூர்ச்சடகோபன்***
**திருவடிமேலுரைத்ததமிழ் ஆயிரத்துளிப்பத்தும்***
**திருவடியேயடைவிக்கும் திருவடிசேர்ந்தொன்றுமினே.** (11)



புறம்புண்டான ருசியைப்போக்கித் தன்பக்கலிலே ருசியைப்பிறப்பித்த உபகா த்தை அநுஸந்தித்து ஏத்துகிறார்; [திருவடியை] ஸர்வஸ்வாமியாயுள்ளவனை. [நார னை] கேவலம் ஸ்வாமித்வமேயன்றிக்கே, இவை "அல்லோம்" என்றவன்றும் தான் விடமாட்டாதபடி வத்ஸலனாயுள்ளவனை. [கேசவனை] வத்ஸலனாய்க் கடக்க இருக்கை ன்றிக்கே இவற்றோடு ஸஜாதீயனாய் வந்து அவரித்து அவர்கள் விரோதிகளைப் போக்குமவனை. [பரஞ்சுடரை] இப்படி அவதரித்து நின்றவிடத்திலே உண்டான நுஷ்யத்வே பரத்வத்தைச் சொன்னபடி. [திருவடி சேர்வதுகருதி] அவன் திருவடி ளைக் கிட்டினேமாகவேணு மென்னும் மநோரதத்தை யுடையராய். அடியேபிடித்து நோரதம் இதுவேயிறே, "துயரறுசுடரடிதொழுதெழு" என்று. [செழுங் குருகூர்ச்சட கோபன்] அவ்வூரில் பிறப்பாயிற்று இவர்க்கு இந்த ப்ராவண்யத்துக்கு அடி; திருவயோத் யையில் மண்பாடுதானே ராமபக்தியைப் பிறப்பிக்குமாபோலே. [திருவடிமேலுரைத்த இத்யாதி] அவன் திருவடிகளிலே சொன்ன தமிழாயிரத்திலும் வைத்துக்கொண்டு இந் ப்பத்தும் அவன் திருவடிகளிலே சென்று அடைவிக்கும்; நீங்களும் அதுக்கு உறுப்பாகத் திருவடிகளிலே சென்று கிட்டுங்கோள். அவன் திருவடிகளிலே கிட்டக்கொள்ள, அடிசிற் றானைபோலே, உங்களுக்குமாயிராதே அவன் திருவடிகளில் நித்யகைங்கர்யத்திலே அந்வ க்கப்பாருங்கோள். (ஸாயுஜ்யம் ப்ரதிபந்நா யே) என்றும், (யேநயேந தாதா கச்சதி தேந தந ஸஹ கச்சதி) என்றும் சொல்லுகிறபடியே, இளையபெருமாளைப்போலே பிரியாதே ன்று அவன்நினைவுக்கீடாக அடிமைசெய்யப்பாருங்கோள். இப்படி அடிமைசெய்வார் கு, இவர் விட்டவையும் விட்டுப் பற்றிற்றும் பற்றவேணுமோ? என்னில், இவர் அருளிச்செய்த இந்தத் திருவாய்மொழியை அநுஸந்திக்கவே, தன்னடையே சப்தாதி களில் விரக்தியையும் பிறப்பித்து அவன் திருவடிகளிலே சேர்விக்கும் இதுதானே. (11)

திருவாய்மொழி நூற்றந்தாதி

நண்ணுதுமாலடியைநானிலத்தேவல்வினையால்*
எண்ணாத்துன்பமுறுமிவ்வுயிர்கள்* — தண்ணிமையைக்
கண்டிருக்கமாட்டாமல் கண்கலங்கும் மாறனருள்*
உண்டுநமக்குற்றதுணையொன்று. (39)

ஆழ்வார் திருவடிகளே சரணம்,
எம்பெருமானார் திருவடிகளே சரணம், சீயர் திருவடிகளே சரணம்.

---

## பத்தாந் திருவாய்மொழி - ஒன்றுந்தேவும்: ப்ரவேசம்.

ஒருநிலத்திலே ஒரு கூறு உவர்ந்துகிடக்க மற்றைக்கூறு விளைவதறுப்பதாமா போலே, நித்யவிபூதியும் நித்யஸூரிகளும் பகவதநுபவமே யாத்ரையாய்ச் செல்லாநிற்க, ஸம்ஸாரமாகிற பாலைநிலத்திலுள்ளார் சப்தாதிவிஷயங்களிலே ப்ரவணராய் இவற்றி டைய லாபாலாபங்களே பேறுமிழவுமாய் பகவத்விமுகராய் 'க்லேசப்படுகிறபடியை நுஸந்தித்து. 'அவர்களைத் திருத்துவோம்' என்று பார்த்து, ஸர்வேச்வரன் உளனு ருக்க நாம் இருந்து க்லேசப்படவேணுமோ?' என்று, 'தேவர் உள்ளீராயிருக்க, இவை ப்படி நோவுபட விட்டிருக்கை போருமோ? இவர்களையும் திருத்தி நல்வழிபோக்க வேணும்' என்று அவன் திருவடிகளிலே விழ, 'நம் குறையல்லகாணும்; இவை அசித் ாய் நாம் நினைத்தபடி காரியங்கொள்ளுகிறோமல்லோமே; சேதநரானபின்பு இவர்கள் க்கலிலேயும் ருசியுண்டாகவேணுங்காணும் அபுநராவ்ருத்திலக்ஷண மோக்ஷத்தைப் பெறும்போது; நாமும் உம்மோபாதி ஆவதெல்லாம்பார்த்து முடியாமை கண்ணநீரோ

டேகாணும் கைவாங்கிற்று' என்ன. 'இவர்களுக்கு ருசியில்லையாளுலும், பேற்று
வேண்டுவது இச்சாமாத்ரமாயிற்ருன பின்பு. இந்த இச்சையையும் நீயே பிறப்பித்து
கொள்ளுமித்தனையன்ருே?' என்று; உதங்கன் துர்யோதநாதிகள் பக்கலுண்டான ப
பாதத்தாலே, துர்யோதநாதிகளை அழியச்செய்து வெற்றிகொண்டு நிற்கச்செய்தே வ
'உனக்கு ப்ராப்தி ஒத்திருக்க, பாண்டவர்களுக்குப் பக்ஷபதித்து இவர்களை அழியச்செ
தாயே' என்ன, 'அவர்களை ஆந்தனையும் பொருந்தவிட்டுப் பார்த்தோம்; அவர்கள் 'ந
கள் பந்துக்கள் ஜீவிக்கில் ஜீவியோம்' என்ற பின்பன்ருே நாம் அவர்களை அழி
செய்தது' என்ன 'ஸர்வநியந்தாவானபின்பு அவர்களுக்கு இசைவைப் பிறப்பித்து
பொருந்தவிட்டுக் கொள்ளாவிட்டதென்?' என்று அவன் நிர்ப்பந்தித்தாற்போலே இ
ரும் நிர்ப்பந்திக்க, 'சேதநரானபின்பு ருசிமுன்பாகச்செய்யவேணுமென்றிருந்தோமித்த
காணும்; அது கிடக்க உமக்குக் குறையில்லையே; உம்மைக்கொடுபோய் வைக்கப்புகு
தேசத்தைப் பாரீர்' என்று பரமபதத்தைக் காட்டிக்கொடுக்க, கண்டு க்ருதார்த்தரா
கீழில்திருவாய்மொழியிலே; பின்னையும் தம்செல்லாமையாலே, ஸர்வேச்வரன் கைவி
ஸம்ஸாரத்தையும் திருத்தப் பார்க்கிருர். 'ஸம்ஸாரத்தை அடியறுக்கவேணும்' என்
பார்த்தார். ஸம்ஸாரபீஜம் இதரதேவதைகள்பக்கல் ப்ராவண்யமும், பகவத்பரத்வஜ்ஞ
மில்லாமையுமாயிருந்தது; அதுக்கு உறுப்பாக பகவத்பரத்வஜ்ஞாநத்தை உபதேசிக்கிரு

எம்பார், ''ஸகலவேதசாஸ்த்ரங்களையும் அதிகரித்துவைத்து, 'பரதத்வம் இ
னது' என்று அறுதியிடமாட்டாதே, 'சேம்புக்குக்கூராச் சிற்றறிவாளுண்டோ? நம
உபாஸ்யரல்லாதாருண்டோ?' என்று, கண்டவிடமெங்கும் புக்குத் தலைசாய்த்துத் தி
மாறித் திரியாநிற்க, எம்பெருமானுர்தர்சநஸ்த்தரில் எத்தனையேனும் கல்வியில்ல
ஸ்த்ரீப்ராயரும் தேவதாந்தரங்களை அடுப்பிடுகல்லோபாதியாக நினைத்திருக்கிறது இ
வொன்றுந்தேவும் இப்பக்ஷத்திலே உண்டாகையிறே'' என்று அருளிச்செய்வர்; (த்ரு
க்ருதவிரிஞ்சாதி) 'கார்த்தவீர்யார்ஜுநன் என்பானொருவன் தான் ராஜ்யம் பண்ணு
காலத்தில் ஆரேனுமொருவர்பாபசிந்தைபண்ணிருண்டாகில் அவர்கள் முன்னே கை
வில்லுமாய் நின்று அவற்றைத்தவிர்த்துப்போந்தான் என்றுல், 'இது உபபந்நம்' என்றி
பர்கள்; ஒரு க்ஷுத்ரமநுஷ்யனுக்கு 'இது கூடும்' என்றிருக்கிறவர்கள், 'ஸர்வசக்தி
ஸர்வாந்தர்யாமியாயிருக்கிற ஸர்வேச்வரன் இப்படி வ்யாபித்துநின்று நோக்கு
என்றுல், சேதநர் 'இது அநுபபந்நம்' என்றிருப்பர்கள்; 'ஜாதி, வ்யக்திதோறும் ப
மாப்ய வர்த்திக்கும்' என்றுல், 'அசித்பதார்த்தத்துக்கு இது கூடும்' என்றிருப்பர்க
'பரமசேதநனுயிருப்பானொருவன் பரிஸமாப்ய வர்த்திக்கும்' என்றுல், 'இது கூடா
என்று ஸம்சயியாநிற்பர்கள்.

முதல் திருவாய்மொழியிலே ஸ்வாநுபவத்துக்கு உறுப்பாக, அவன்காட்டி
கொடுத்த பரத்வத்தை அநுஸந்தித்து, அதுதன்னை 'உளன்சுடர்மிகுசுருதியுள்'' என்
ச்ருதிச்சாயையாலே உபபாதித்தார்; 'ஸ்வாநுபவந்தான் பிறர்க்கு உறுப்பாயிருக்க
யாலே சேதநராகில் இவ்வளவு அமையுமிறே' என்றுபார்த்து, பின்பு இதிஹாஸபுரா
ப்ரக்ரியையாலே பரத்வத்தை அருளிச்செய்தார் ''திண்ணன்வீ''ட்டில் அதிலும் அவர்க
திருந்தாமையாலே, 'அவர்கள் தங்களையே உத்தேசித்தே பகவத்பரத்வத்தை உபபாதி
போம்' என்று பார்த்து, அதுக்கு உறுப்பாக, இதர தேவதைகள்பக்கலுண்டான பர
சங்கையை அறுத்துக்கொண்டு பகவத்பரத்வத்தை உபபாதிக்கிருர் இதில். மு
திருவாய்மொழியில் பரத்வேபரத்வத்தை அருளிச்செய்தார்; அது ஸம்ஸாரிகளுக்கு எ



நிலமாயிருந்தது; அதுக்காக, அவதாரத்திலே, பரத்வத்தை அருளிச்செய்தார்
திண்ணன்வீ''ட்டில்: அதுவும் தத்ப்ராயமாய்ப் பிற்பாடர்க்கு எட்டிற்றில்லை: இரண்டும்
தேசகாலவிப்ரக்ருஷ்டமாயிருந்தது; அக்குறைகளொன்றுமின்றிக்கே. ''பின்னுனார்வணங்
சோதி'' என்கிறபடி பிற்பாடர்க்கும் இழக்கவேண்டாத அர்ச்சாவதாரத்திலே பரத்
த்தை அருளிச்செய்கிருர் இதில்.

இனி இவர்தாம் திருத்தப்பார்த்த வழி ஏது? என்னில்; எல்லார்க்குமொக்க
ஸுகங்களுண்டாகவும், துக்கங்களின்றிக்கே யொழியவும் அபேக்ஷிதமாயிருக்கச்செய்தே,
அபேக்ஷித்த ஸமயத்தில் அபிமதமான ஸுகம் வரக்காணுமையாலும், அநபிமதமான துக்
கம் வரக்காண்கையாலும், 'இவற்றுக்கு நியாமகனைப் நின்று அநுபவிப்பிக்கிருனொருவ
ன் உளன்' என்று கொள்ளவேண்டியிருந்தது. அதுவென்? ஸுகதுக்கங்களுக்கு ஹேது
வான புண்யபாபங்கள் அநுபவிப்பிக்கிறன வாளுலோ? என்னில்; அவற்றினுடைய ஸ்வ
ரூபத்தை ஆராய்ந்தவாறே, அவை அசேதநமா யிருப்பன சில க்ரியாவிசேஷங்களாகை
யாலே அப்போதே நசிக்கும்; இனி, தாருநிர்மாணத்தில் வந்தால் கர்த்தாவையொழிய
வாச்யாதிகளுக்கு ஒருவ்யாபாரம் கூடாதாப்போலே, அந்தக்ரியைகளுக்கும் ஒரு சேதநனை
யொழிய பலப்ரதாநசக்தி கூடாமையாலே ஒருசேதநனைக்கொள்ளவேண்டிவரும்; இனி
'அபூர்வம்' என்று ஒன்றைக்கல்பித்து 'அது அத்ருஷ்டரூபேண நின்று பலப்ரதமா
கிறது' என்னுமதிற்காட்டில், 'ஒருபரமசேதநன் நெஞ்சிலே பட்டு அவனுடைய நிக்ரஹ
ரூபத்தாலும் அநுக்ரஹரூபத்தாலும் இவை பலிக்கிறது' என்கை நன்றிறே. இனி, 'அங்
கு பரமசேதநன்தானுகிருன் ஆர்? அவன் ஸ்வரூபஸ்வபாவங்கள் இருக்கும்படி எங்ங
னே? அவன் சேஷ்டிதங்கள் இருக்கும்படி எங்ஙனே?' என்னில்; அது ப்ரமாணங்
கொண்டு அறியவேணும். அதில், ப்ரத்யக்ஷாதி ப்ரமாணங்கள் அதீந்த்ரியார்த்தத்தில்
கோசரியாமையாலே அவை ப்ரமாணமாக மாட்டாது; இனி, ஆகமாதிகள் ப்ரமாண
மாளுலோ? என்னில்; அவற்றுக்குப் புருஷபுத்தி ப்ரபவமான விப்ரலம்பாதிதோஷம் உண்
டாகையாலே அவையும் ப்ரமாணமாக மாட்டாது; இனி, சதுர்த்தசவித்யாஸ்த்தாந
மாதநமாய் நித்யமாய் அபௌருஷேயமாகையாலே விப்ரலம்பாதி தோஷஸம்பாவநாரஹி
தமாய் ஸாத்த்விகபுராணங்களாலே உபப்ரும்ஹிதமான வேதம் ப்ரமாணமாகவேணும்.
ஸாத்த்விகபுராணங்கள்' என்று விசேஷித்ததுக்குக் கருத்தென்? என்னில்; புராணகர்த்
தாக்களெல்லாரும் ப்ரஹ்மாவின்பக்கலிலே சென்று இவ்விரண்டு காதைகளையும் கேட்
டுப்போந்து தாந்தாம் புராணங்கள் பண்ணினார்கள்; அந்த ப்ரஹ்மாதானும் (யோ ப்ரஹ்
மாணம் விததாதிபூர்வம் யோவை வேதாம்ச்ச ப்ரஹிணோதிதஸ்மை) என்கிறபடியே ஸர்
வேச்வரனாலே ஸ்ருஷ்டனாய் அவனாலே லப்தஜ்ஞாநனுமா யிருக்கச்செய்தேயும், (ப்ருஷ்
டப்ரோவாச பகவாநப்ஜயோநி: பிதாமஹ:) என்று கொண்டு ருஷிகளைக் குறித்து உப
தேசிக்கிற விடத்திலே, 'நான் குணத்ரயவச்யனாயிருப்பன்; தமோகுணம் உத்ரிக்தமான
போதும் ரஜோகுணம் உத்ரிக்தமானபோதும் சொன்னவற்றைப் போகட்டு, ஸத்த்வ
குணம் உத்ரிக்தமான ஸமயத்தில் சொன்னவற்றை ஸ்வீகரியுங்கோள்' என்றானிறே; இனி,
(அக்நே:சிவஸ்யமாஹாத்ம்யம் தாமஸேஷு ப்ரகீர்த்யதே । ராஜஸேஷு ச மாஹாத்ம்யம்
அதிகம்ப்ரஹ்மணோவிது: । ஸாத்த்விகேஷ்வதகல்பேஷு மாஹாத்ம்யமதிகம் ஹரே:) என்
கின்றதிறே; ஆகையாலே. குணபேதங்களாலே புருஷபேதங்களைக்கொண்டு அவ்வழி
யாலே புராணபேதம் கொள்ளலாயிருந்தது; ஆகையாலே, ஸாத்த்விகபுராணங்களாலே
உபப்ரும்ஹிதமான வேதம் ப்ரமாணமாகவேண்டியிருந்தது. அந்த வேதத்துக்கு குணத்ர

யங்களால் வரும் தோஷம் இல்லையேயாகிலும், ஸவிபூதிகனான ஸர்வேச்வரனை உ
பாதிக்கப்போந்ததாகையாலே, (த்ரைகுண்யவிஷயாவேதா:) என்கிறபடியே, குணத்ரய
களுக்கும் ஆச்ரயபூதரான சேதநரை விஷயமாகவுடைத்தாய் அவர்களுக்கு ஹிதம்சொ
லப்போந்ததாகையாலே அவர்களுடைய குணநுகுணமாக ஹிதம் சொல்லுமது உண்ட
யிருக்குமதுக்கும். அது அங்ஙன் சொல்லிற்றேயாகிலும், (யாவாநர்த்தஉதபாநேஸர்வத
ஸம்ப்லுதோதகே | தாவாந் ஸர்வேஷு வேதேஷு ப்ராஹ்மணஸ்ய விஜாநத:) என்கி
படியே ஆறு பெறுகியோடாநின்றால், தாபார்த்தனானவன் தன்விடாய் தீருகைக்
வேண்டுவது உபஜீவிக்குமத்தனையல்லது, ஆற்றுநீரை அடங்க வற்றுவிக்கவேணுமெ
ஆம் நிர்ப்பந்தமில்லையிறே; அப்படியே முமுக்ஷுவானவன் இவற்றில் தனக்கு உபாதே
மான அம்சத்தையிறே க்ரஹிப்பது. இனி இந்த வேதந்தான் 'பூர்வபாகம்' என்று
'உத்தரபாகம்' என்றும் இரண்டு வழியாலே பிரிவுண்ணக்கடவதாய், அதில் பூர்வபாக
னது ஆராதநவேஷத்தைச் சொல்லியும் ஸ்வர்க்காதி புருஷார்த்தங்களையும் தத்ஸாதநா
களையுஞ் சொல்லியும், அவற்றிலே நின்று பரக்குமதாயிருக்கும்; இனி, உத்தரபா
மானது ஸர்வேச்வரனுடைய ஸ்வரூபரூப குணங்களைப் பரக்க நின்று உபபாதிக்கும்.

இனி, உபாஸ்யவஸ்து எது? என்றால், ஜகஜ்ஜந்மாதி காரணமென்று காரண
வாக்யங்கள் ஒருங்கவிட்டுவைத்தன, எங்ஙனே யென்னில்: (யதோவா இமாநி பூதாநி ஜ
யந்தே | யேநஜாதாநி ஜீவந்தி | யத்ப்ரயந்த்யபிஸம்விசந்தி | தத்விஜிஜ்ஞாஸஸ்வ | த
ப்ரஹ்ம) என்றுகொண்டு அல்லாத தத்த்வங்களுக்கு * அத்யேயதை முன்னாக ஜக
காரணவஸ்துவுக்கு த்யேயதையை விதித்துக்கொண்டு நின்றது; (காரணந்து த்யேய
என்னக்கடவதிறே. அந்த த்யேயவஸ்துதன்னை, (ஸதேவஸோம்யேதமக்ரஆஸீத்) என்
ஸச்சப்தத்தாலே சொல்லி, சாகாந்தரத்திலே நின்று' (ஆத்மாவா இதமேகஏவாக்
ஆஸீத்) என்று ஆத்மசப்தத்தாலே சொல்லி, அதுவும், பலவிடங்களிலே ஓட்டிக்கொள்
லாயிருக்கையாலே, (ப்ரஹ்மவாஇதம் ஏகமேவ அக்ரஆஸீத்) என்று ப்ரஹ்மசப்த
தாலே சொல்லி, அந்தப்ரஹ்மசப்தந்தானும் அநேகதத்த்வங்களை வசிக்குமாகையாலே
(ஏகோஹவை நாராயணஆஸீத்) என்று நாராயண சப்தவாச்யனைச்சொல்லி நின்றது
ஆனால், பின்னை, (நஸங் நசாஸச்சிவ ஏவகேவல;) என்றும், (சம்புராகாசமத்யே த்யேய
என்றும் ருத்ராதிகளுக்குக் காரணத்வமும் த்யேயதையும் விதியாநின்றதே: அவை செய்
தென்? என்னில், அவர்களை உத்தேசித்துச் சொல்லிற்றேயாகிலும் சுத்திகுணயோக
தாலும் ஸுகப்ரதத்வத்தாலும், அவையும் விசேஷ்யமான நாராயண சப்தவாச்யன்பக்க
லிலே சென்று சேரும். சம்பு சிவாதி சப்தங்களை நாராயண சப்தவாச்யனுக்கு விசேஷண
மாக்கியோஜித்தவோபாதி, இந்நாராயண சப்தத்தை சம்பு சிவாதி சப்தவாச்யனுக்
னுக்கு விசேஷணமாக்கினாலோ? என்னில், குணயோகத்தாலே அவற்றை இங்கே சேர்க்
லாம்; இது யோகரூடியாகையாலே, வ்யக்த்யந்தரத்தில் சேர்க்க வொண்ணாது. சிலர்க்கே
நாமதேயமாய் வ்யவஸ்த்திதமா யிருக்கிறவற்றை வேறே சிலர்பக்கலிலே கொடுபோய்
சேர்க்கும்படி யெங்ஙனே? என்னில்; இந்த்ரப்ராணாகாச சப்தங்களானவை அவ்வோரு
வில் பர்யவஸியாதே, ஸாக்ஷாத் வாச்யத்திலே சென்று பர்யவஸியாநின்றதிறே. இ
போது, இந்த்ரன் என்றால், இச்சப்தம் இவ்வாக்கனை இந்த்ரனிலன்றியே ஸர்வேச்வரன்
பக்கலிலே பர்யவஸிக்கிறுப்போலேயும், ப்ராணசப்தம் பஞ்சவ்ருத்தி ப்ராணங்களிலன்
றிக்கே ப்ராணபூதனானவன்பக்கலிலே வர்த்திக்கிறுப்போலேயும், ஆகாசசப்தம் பூத
காசமாத்ரத்திலன்றிக்கே அவனளவும் காட்டுகிறுப்போலேயும், சம்புசிவாதி சப்தங்களு
ஸர்வேச்வரன் பக்கலிலே பர்யவஸித்தல்லதிராது. இனித்தான் ப்ரகாரவாசி சப்தங்கள்



ரகாரிபர்யந்த ஸ்வார்த்தாபிதாநம் பண்ணக்கடவதாகையாலும், ப்ரகாரியானவன்பக்க
லே பர்யவஸித்தன்றி நில்லாது. இனி, (ததோ யதுத்தரதரம்) என்றுகொண்டு சொல்லு
ற விடத்திற் செய்வதென்? என்னில்; கீழே ஸர்வேச்வரனைப் புருஷசப்தவாச்யனைச்
சொல்லி, இனி 'உத்தரதரம்' என்னும்போது புருஷோத்தமனென்றதா மத்தனை.
துக்கு அடியென்? என்னில், (யஸ்மாத் பரம் நாபரமஸ்தி கிஞ்சித்) என்று ஓதிவைத்து,
துக்குமேலே யொன்றுண்டுகாண்' என்னும்போது, அஜ்ஞனைச் சொல்லுமத்தனை;
தலிலே ஓதாதவன் வார்த்தையாமத்தனை. (தஸ்மிந் யதந்தஸ்ததுபாஸிதவ்யம்) என்
து வேறொன்று உபாஸ்யமென்கிறதல்ல, அவன்தன்னோபாதி அவன் குணங்களும்
பாஸ்யமென்றது. இனித்தான், ஜகத்காரணவஸ்துவாய்க்கொண்டு உபாஸ்யமாவது
ன்றுமோக்ஷ உண்டாகவேணுமிறே; அதில் ஸம்ஹாரத்தில் (ஏகோஹவை நாராயண
ஆஸீத்) என்று நாராயணசப்தவாச்ய னொருவனுமே உளனாகச்சொல்லி, (நப்ரஹ்மா நே
நா:) என்று அவர்களை இல்லையாகச் சொல்லிற்றிறே. இனி, அல்லாதாரில் அவர்களுக்கு
உத்கர்ஷமுண்டோ? என்று சங்கியாமைக்கு, (நேமேத்யாவாப்ருதிவீ நநக்ஷத்ராணி)
ன்று அவற்றோடொக்க இவர்களையும் ஸமாநாதிகரித்துவிடுகிறது. ஸ்ருஷ்டியிலும்,
ன்மைப்புனல் பண்ணி நான்முகனைப்பண்ணி'' என்று ஒருநீராக ஸமாநாதிகரித்திறே
டக்கிறது.

ஆக, இப்படிகளாலே இதரதேவதைகள் பக்கலுண்டான பரத்வசங்கையை
றுத்து, ஸர்வஸ்மாத்பரனாய் ஸர்வஸ்ரேஷ்டராவாய் ஸமஸ்தகல்யாணகுணாத்மகனாய் ஸர்வ
கனாய் ஸர்வாந்தர்யாமியாய் நாராயண சப்தவாச்யனான ஸர்வேச்வரன், தன்பெருமை
ஷெல்லாவற்றோடுங்கூடக் கண்ணுக்கு விஷயமாம்படி திருநகரியிலே வந்து ஸந்நிஹித
னான்; அவனை ஆச்ரயித்து எல்லாரும் க்ருதார்த்தராய்ப் போங்கோள் என்று அருளிச்
செய்கிறார்.

முதற்பாட்டில் (ஏகோஹவை நாராயண ஆஸீத்) என்கிற காரணவாக்யப்ரக்ரி
யையை அநுஸந்தித்துக்கொண்டு; ஸர்வஸ்ரேஷ்டாவான ஸர்வேச்வரன், மாத்ருஸந்நிதி
யொழிய ப்ரஜை வளராதாப்போலே தன் ஸந்நிதியொழிய இவை ஜீவிக்கமாட்டாது
என்று பார்த்துத் திருநகரியிலே ஸர்வஸுலபனாய் நிற்க, 'வேறே யாச்ரயணீயதத்த்வ
முண்டென்று தேடித் திரிகிறீர்கோளே' என்று க்ஷேபிக்கிறார்.

**ஒன்றுந்தேவுமுலகுமுயிரும்மற்றும் யாதுமில்லா**
**அன்று* நான்முகன்தன்னொடு தேவருலகோடுயிர்படைத்தான்***
**குன்றம்போல்மணிமாடநீடு திருக்குருகூரதனுள்***
**நின்றவாதிப்பிரான்நிற்க மற்றைத்தெய்வம்நாடுதிரே.** (1)

[ஒன்றுந்தேவும் இத்யாதி] தேவஜாதியும் அவர்களுக்கிருப்பிடமான லோகங்
களும், மநுஷ்யாதிகளான ஆத்மாக்களும், அண்டகாரணமான மஹதாதிகளும், இவை
ஒன்றுமில்லாதவன்று என்றுகொண்டு, ஒன்றும்' என்கிற இத்தை இங்கே சேர்க்
கவுமாம். அங்ஙனன்றிக்கே, கார்யத்துக்குக் காரணத்திலே லயமாகச்சொல்லுகையாலே,
காரணபூதனான தனபக்கலிலே சென்று ஒன்றுகிற தேவும் உலகும் உயிரும்
மற்றும்யாதுமில்லாவன்று என்னவுமாம். (ஸதேவ) என்னக்கடவதிறே. [நான்முகன்
இத்யாதி] அல்லாதார் ஒருவனை ரக்ஷிக்குமிடத்தில் ஒருகைம்முதல்கண்டு, இது
நமக்கு ஒருநாளாகிலும் உதவும் என்றாயிற்று ரக்ஷிப்பது; வெறுமையே பச்சையாக
ரக்ஷிப்பான் ஸர்வேச்வரனாயிற்று. [நான்முகன்தன்னொடு தேவருலகோடு உயிர்படைத்

தான்] சதுர்முகனோடேகூட தேவஜாதியையும், அவர்களுக்கு இருப்பிடமான லோ
கங்களையும் சேதநவர்க்கத்தையும் ஸ்ருஷ்டித்தான். ஸர்வேச்வரன் சதுர்முகனை ஸ்ருஷ்டி
தான்; சதுர்முகன் பஞ்சமுகனை ஸ்ருஷ்டித்தான்; பஞ்சமுகன் ஷண்முகனை ஸ்ருஷ்டித்தான்
ஆக, இதுதான் பஹுமுகமாயிற்றுக்காணும். நாட்டார் ருத்ரனுக்கு உத்கர்ஷ
சொல்லி ப்ரமியாநிற்கவும். இவர் அவன்பக்க லொன்றுங் காணாமையாலே, திருநாபீ
மலத்திலே அவ்யவதாநேந பிறக்கைபால் வந்த ஏற்றத்தை யுடையனாகையாலே ப்ரஹ்
மாவை உபாதாநம்பண்ணி, ருத்ரனை தேவஸாமாந்யத்திலே கூட்டிப்போருகிறார். ஸ
ஹாரத்தில் மஹதாதிகளளவும் சொன்னார்; ஸ்ருஷ்டியில் ப்ரஹ்மாவைத் தொடங்கி
சென்னார்; இதுக்குக் கருத்து மஹதாதிகளில் பரத்வசங்கை பண்ணுவாரில்லை: ப்ரஹ்
மாதிகள்பக்கலிலே பரத்வசங்கை பண்ணுவார்கள் பாமரராயிருப்பார்; அதுக்காக அ
விடமேபிடித்துக் கழிக்கிறார். சதுர்த்தசபுவநஸ்ரஷ்டாவோடு அவனாலே ஸ்ருஷ்டா
நித்யஸ்ருஷ்டிக்குக் கடவரான தசப்ரஜாபதிகளோடு, அவர்களுக்கு போகஸ்தாநமா
லோகங்களோடு அவர்களுக்குக் குடிமக்களான மநுஷ்யாதிகளோடு வாசியறப் படை
தான்; போகமோக்ஷங்களை விளைத்துக்கொள்கைக்குக் கரணகலேபரங்களைக் கொடுத்தான்
[ குன்றம் இத்யாதி ] இப்படி ஸ்ருஷ்டித்தவன்தான் அஸந்நிஹிதனாய் நிற்கையன்
றிக்கே மலைகளைக்கொடுவந்து சேரவைத்தாற்போலே யிருப்பதாய் மணிமயமான
மாடங்களினுடைய ஒக்கத்தையுடைத்தான திருநகரியிலே நின்ற, (ஆசயா யதிவ
ராம: புநச்சப்தாபயேதிதி) என்னுமாபோலே நாம்கொடுத்த கரணங்களைக் கொண்
(நநமேயம்) என்னாதே வணங்குவர்களோ? அன்றிக்கே, நாம் வளைந்து கூட்டிக்கொள்
ளப்புக்கால் விலக்காதொழிவர்களோ? என்று அவஸரப்ரதீக்ஷனாய் நின்றபடி. அங்கு
சேஷியைப்பெறுகைக்கு சேஷபூதன் நின்ற நிலை, இங்கு சேஷபூதரைப்பெறுகைக்கு
சேஷி நின்ற நிலை யிறே. [ஆதிப்பிரான்நிற்க] இப்படி உங்கள்பக்க லாசையாலே
திருநகரியிலே வந்து நித்யவாஸம்பண்ணுகிற இவனை விட்டு. [மற்றைத்தெய்வம்நாடு
திரே] தேடித்திரியுமதொழிய, ஆச்ரயணீயரைக் கிடையாது. (வாஸுதேவம் பரித்ய
ஜ்யயோந்யம் தேவமுபாஸதே, த்ருஷிதோ ஜாஹ்நவீதீரே கூபம் கநதி துர்மதி:) என்கிற
படியே த்ருஷிதனானவன், கங்கைபெருகி யோடாநிற்க அதிலே அள்ளிக்குடித்துத்
தன்விடாய் தீரமாட்டாதே, அதன்கரையிலே குந்தாலிகொண்டு கிணறுகல்லித் தன்
விடாய்க்கு உதவ நாக்குநனைக்க இருக்குமாபோலே; ப்ராப்தனுமாய் ஸுலபனுமாய்
ஸ்வாராதனுமாய் ஸுசீலனுமான இவனைவிட்டு அப்ராப்தராய் துர்லபராய் துராராதராய்
துச்சீலராய் சீலித்து ஆராதித்தாலும் சேட்டைதன் மடியகத்துச் செல்வம் பார்த்திருக்கு
மாபோலே பலிப்பது மொன்றின்றிக்கே யிருக்கிற திருவில்லாத்தேவரைத் தேடி யாச் (1)
யிக்கத் திரிவிகோளேயென்று க்ஷேபிக்கிறார். ... ...

இரண்டாம்பாட்டு. ஆச்ரயிக்கிற உங்களோடு, ஆச்ரயணீயரான அவர்களோடு
வாசியற எல்லாரையும் உண்டாக்கினவன் நின்றருளுகையாலே ப்ராப்யமான திருநகரியை
ஆச்ரயியுங்கோள் என்கிறார்,

**நாடிநீர்வணங்குந்தெய்வமும் உம்மையும்முன்படைத்தான்***
**வீடில்சீர்ப்புகழாதிப்பிரானவன் மேவியுறைகோயில்***
**மாடமாளிகைசூழ்ந்தழகாய திருக்குருகூரதனைப்***
**பாடியாடிப்பரவிச்சென்மின்கள் பல்லுலகீர்பரந்தே.** (2)

[நாடிநீர்வணங்கும்தெய்வமும்] வசநாபாஸங்களாலும்; யுக்த்யாபாஸங்களாலும்
ஸ்வத: உத்கர்ஷமில்லாமையாலே அவை தான் இறுயாநிற்கச்செய்தே, நீங்கள் பொ



றந்தடவி வருந்திச் சேமம் சாத்திவைத்து ஆச்ரயிக்கிற தேவதைகளையும். [நாடி] கள்
ளரைத் தேடிப்பிடிக்குமாபோலே, தேடிப்பிடிக்கவேண்டி யிருக்கிறபடி. ஆடுதிருடின
கள்ளரிறே இவர்கள்தான்; அணங்குக்கு அருமருந் தென்று அங்கே ஆடுகட்டினவர்க
ளாகையாலே தேடிப்பிடிக்கவேணுமே, 'கள்ளரச்சம் காடுகொள்ளாது' என்று, தன்னை
ஆச்ரயிக்கவருகிறவர்களையும் தன்னைக்கட்ட வந்தார்களாகக் கொண்டுபோகிறபடி. [நீர்]
ராஜஸராயும் தாமஸராயுமுள்ள நீர். நீரென்று அவர்களோடு தமக்கு ஒட்டறச் சொல்லு
கிறார். உங்கள்ப்ரதிபத்தியொழிய அவற்றின்பக்கல் ஒருயிரில்லை. [நீர்வணங்கும்தெய்வ
மும் உம்மையும்] நீங்கள் ஆச்ரயிக்கிற ராஜஸராயும் தாமஸராயுமுள்ள தேவதைகளையும்
உங்களையும் படைக்கிறவிடத்தில். [முன்படைத்தான்] ஸ்ருஷ்டிக்கிறவிடத்தில் முற்பட
அவர்களை ஸ்ருஷ்டித்துப் பின்னை உங்களை ஸ்ருஷ்டித்தான். (யோ ப்ரஹ்மாணம் விததாதி
பூர்வம்) என்கிறபடியே ப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்துப் பின்பிறே இவ்வருகுள்ளாரை
ஸ்ருஷ்டித்தது. [நீர் வணங்கும் தெய்வமும் உம்மையும் முன்படைத்தான்] அவன்
ஸ்ருஷ்டித்திலனாகில் நீங்கள் இதர தேவதைகளை ஆச்ரயிக்கும்படி யெங்ஙனே? [படைத்
தான்] அவன் படைத்திலனாகில் எங்ஙனே உண்ணவிருந்திகோள்? உங்களுக்கு ஆச்ரய
ணீயத்வ முண்டாமன்றிறே. அவர்கள் ஆச்ரயணீயராவது. [வீடில்சீர் இத்யாதி] நீங்கள்
அடியாச்ரயிக்கிற தேவதைகளுடைய ஐச்வர்யம்போலே ஒருவனுடைய புத்த்யதீநமாய்
அவன் நினைத்திலனாகில் இல்லையாய், அதுதனக்கு அடி கர்மமாய், அக்கர்மக்ஷயம் பிறந்த
போதே நசிக்கையன்றிக்கே. ஸ்வதஸ்ஸித்தமான ஸம்பத்தையுடையவன். [வீடில்சீர்]
நீங்கள் ஆச்ரயிக்கிறவர்களுடைய ஸம்பத்துப்போலே ஸாவதியல்ல; கர்மமடியாய் அதிலே
ஒன்று குறையக் குறைதல், பலப்ரதனானவனுடைய அநுக்ரஹம் குறையக் குறைதல்
செய்யுமதில்லையிறே. (பலமத:) இறே. [வீடில்சீர்] நித்யஸித்த கல்யாணகுணங்களை
யுடையவனென்னுதல். (தஸ்மிந் யதந்தஸ்ததுபாஸிதவ்யம்) என்கிறபடியே, அவன்தன்
னோபாதி அவன்குணங்களும் உபாஸ்ய மென்னுமிடம் சொல்லுகிறது. [புகழ்] எல்லா
ரையும் ரக்ஷித்து, அந்த ரக்ஷணத்தால் வந்த புகழையுடையவன். ரக்ஷணத்தால் புகழ்
படைத்தவனன்றோ ஆச்ரயணீயனாவான்? (யசஸச்சைகபாஜநம்). [ஆதிப்பிரான்]
ரக்ஷித்துப் புகழைப்படையாதே பழிபடைத்தாலும் விடவொண்ணாத ப்ராப்தியைச்
சொல்லுகிறது. [பிரான்] கேவலம் ப்ராப்தியேயல்ல, உபகாரகன். உபகாரகனுமாய்
ப்ராப்தனுமாய் யசஸ்வியுமாய்; ஐச்வர்யம், நித்யஸித்தமான கல்யாணகுணங்களென்ன
இவற்றையுடையவனை யொழிய, இவையில்லாதாரை ஆச்ரயிக்கப் ப்ராப்தியில்லை, காரண
வஸ்துவிறே உபாஸ்யமாவது; (காரணந்து த்யேய:) என்னாநின்றதிறே. [அவன்மேவி
யுறைகோயில்] அவன் பரமபதத்தில் உள்வெதுப்போடேபோலேகாணும் இருப்பது. ஸம்
ஸாரிகள்படுகிற க்லேசத்தை யநுஸந்தித்து, 'இவை என்படுகிறனவோ?' என்கிறதிருவுள்
ளத்தில் வெறுப்போடே யாயிற்று அங்கு இருப்பது. நோபஜநம்ஸ்மரந்) என்று கொண்டு
இங்குத்தை துக்கத்தை நினையாதொழியவேண்டுவது, பண்டு துக்கியாயிருந்து ஸம்ஸாரத்
தில்நின்றும் போனவனுக்கிறே. இங்குத்தை துக்கத்தை நினைக்குமாகில் அநுபவிக்கிற
ஸுகத்துக்குக் கண்ணழிவாகாதோ? என்னும் கண்ணழிவில்லையிறே அவனுக்கு. 'பரம
பதத்திலும் ஸம்ஸாரிகள் படுகிற க்லேசத்தை அநுஸந்தித்துத் திருவுள்ளத்தில் வெறுப்
போடேயாயிற்று எழுந்தருளியிருப்பது' என்று பட்டர் அருளிச்செய்ய, 'ஆச்சானும்
பிள்ளையாழ்வானும் இத்தைக்கேட்டு பரமபதத்திலே ஆநந்தநிர்ப்பரனாயிருக்கிற இருப்
பிலே திருவுள்ளத்திலே ஒருவ்யஸநத்தோடே யிருந்தானென்கை உசிதமோ? என்றார்

கள்' என்று 'பண்டிதர்' என்கிறவர் வந்து விண்ணப்பம்செய்ய, (வ்யஸநேஷு மநுஷ்ய ஞாம் ப்ருசம்பவதி துக்கித:) என்றது குணப்ரகரணத்திலேயோ? துக்கப்ரகரணத்தி யோ? என்று கேட்கமாட்டிற்றிலீரோ? இது குணமாகில், 'குணம்' என்று பேர்பெற் வற்றில் அங்கு இல்லாததொன்றுண்டோ?' என்று அருளிச்செய்தார். (ஸமஸ்தகல்யாண குணாத்மகோஸௌ) என்னக் கடவதிறே. தன்னிச்சையொழிய கர்மநிபந்தநமாக மவை இல்லையென்னுமத்தனை போக்கி, அநுக்ரஹகார்யமாய் வருமவை இல்லையெ ஷில், முதலிலே சேதநனன்றிக்கேயொழியுமிறே. (ஸஏகாகீ நரமேத) என்றது நி விபூதியும் குணங்களுமுண்டாயிருக்கச் செய்தேயிறே. [ஆதிப்பிரானவன் மேவியுறை கோயில்] பரமபதத்தில் தன்னில்குறைந்தாரில்லாமையாலே அவ்விடத்தைவிட்டு, நல் படுக்கையையும் போகத்துக்கு ஏகாந்தமானவற்றையும் காற்கடைக்கொண்டு ப்ரஜை னுடைய தொட்டிற்காற்கடையிலே கிடக்கும் தாயைப்போல, ரக்ஷ்யாபேக்ஷரான ஸ ஸாரிகள் இருக்கிற இடமாகையாலே விரும்பி வர்த்திக்குமிடம் இவ்விடமாயிற் [மாடமாளிகை இத்யாதி] உங்களுக்குத்தான் நல்லதேசம் தேட்டமே; 'முக்தப்ராப் தேசம்' என்று தோற்றுகிறதில்லையோ? மாடங்களாலும் மாளிகைகளாலும் சூழ்ந்து த நீயமாயிருக்கும் திருக்குருகூர். [அதனைப்பாடியாடி] "அதனுள்நின்ற ஆதிப்பிரான் என்றவிடம் மிகையென்கிறார். (விஷ்ணோராயதநே வஸேத்) (தேசோயம்ஸர்வகாமதுக் என்கிறபடியே இதுதானே ப்ராப்யம். [பாடியாடி இத்யாதி] ப்ரீதிப்ரேரிதராய் கொண்டு பாடி, உடம்பு இருந்தவிடத்திலிராமை ஆடி. அக்ரமமாகக் கூப்பிட்டு கொண்டு. அத்தேசமென்றால் தம்திருவுள்ளம் இருக்குமாபோலே இருக்குமென்றிரு கிறார்காணும் ஸர்வர்க்கும். [பல்லுலகீர்] ஒருவன் ஸமித்பாணியாய் தாந்தனாய் வர, அ னுக்கு ஹிதோபதேசம் பண்ணுகிறானன்றே; "இவையென்னவுலகியற்கை" என் லோகம் க்லேசப்படுகிறபடியைக் கண்டு எல்லார்க்கும் சொல்லுகிறாரிறே. [பரந்தே பெரியதிருநாளுக்கு ஸர்வதோதிக்கமாக வந்தேறுமாபோலே, நாநாதிக்கமாகப் பா யாடிப் பரவிச்சென்மின்கள். ... ... ... ... (2)

மூன்றாம்பாட்டு. ஜகந்நிகரணாதி திவ்யசேஷ்டிதங்களாலும் இவனே பரன்; இ இசையாதார் என்னோடேவந்து கலந்து பேசிக்காணுங்கோள் என்கிறார்.

**பரந்ததெய்வமும்பல்லுலகும்படைத்து அன்றுஉடனேவிழுங்கிக்***
**கரந்துமிழ்ந்துகடந்திடந்தது கண்டும்தெளியகில்லீர்***
**சிரங்களாலமரர்வணங்கும் திருக்குருகூரதனுள்***
**பரன்திறமன்றிப்பல்லுலகீர்! தெய்வம்மற்றில்லைபேசுமினே.** (3)

[பரந்ததெய்வமும்] கொள்கொம்பு மூடப் படர்ந்து நியாமகரோடொக்க எடு துக் கழிக்கவேண்டும்படி கைவிஞ்சின தேவஜாதியும். [பல்உலகும்] அவர்கள் பர புக்கெல்லாம் போரும்படியான லோகங்களும். அவர்கள் நியாமகராகைக்கு அடியா நியாம்யரான அல்லாத சேதநரையும். [படைத்து] ஸ்ருஷ்டித்து. இவர்தமக்கு அவ னோடு அல்லாதாரோடு வாசியற்றிருக்கிறபடி. [அன்று உடனேவிழுங்கி] ஸ்ருஷ்டி கிறபோது க்ரமத்திலே ஸ்ருஷ்டித்தான்; (யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம்) என்று ஆபத்து வந்தால் அங்ஙன் க்ரமம்பார்த்திருக்கவொண்ணாதே. ப்ரளயாபத்திலே ஒ காலே வயிற்றிலே வைத்து. ப்ரளயம் வந்தாலும் இங்குண்டோ? என்று இளைத்த காட்டலாம்படி கரந்து உள்ளேயிருந்து நோவுபடுகிறனவோ? என்று வெளிநாடுகா உமிழ்ந்து நடுவே மஹாபலிபோல்வார் பருந்திருஞ்சினாற்போலே பறித்துக்கொள் எல்லை நடந்து மீட்டுக்கொண்டு ப்ரளயத்திலே மழுந்தி அண்டபித்தியிலே சேர்ந்த இத்



றாவராஹமாய்ப்புக்கு ஒட்டுவிடுவித்து எடுத்து இப்படி செய்த இவற்றை. [கண்டும்] த்யக்ஷத்திலும் விசதமாயிருக்கிறதுகாணும் இவர்க்கு சாஸ்த்ரம். இவ்வதிமாநுஷ ஷ்டிதங்களைக்கொண்டே 'அவன் ஆச்ரயணீயன்' என்று அறியலாயிருக்க; அறிய ட்டுகிறிலீகோள். [தெளியகில்லீர்] இவர்கள் தெளிகையும் தெளியாமையும் ஒழிய, ர்த்தஸ்த்திதியில் மாறாட்ட மற்றிருக்கிறபடி. அவனை அநீச்வரனாக்குதல், இவர்களை வரர்களாக்குதல் செய்யவொண்ணாதிறே. உங்கள் தெளிவும் கலக்கமுமொழிய. ரங்கள் இத்யாதி] 'ஸர்வஸ்ரஷ்டாவுமல்லன், ஆபத்ஸகனுமல்லன்' என்று இருந்தி காளேயாகிலும், நீங்கள் ஆச்ரயிக்கிற தேவதைகள் செய்கிறது முன்னம் உங்களுக்குக் ண்டால் தெளியலாமே; அவர்கள் 'தலைபடைத்த ப்ரயோஜநம் பெற்றோம்' என்று ணங்குகிறபடியைக் கண்டாகிலும் நீங்கள் ஆச்ரயிக்கப் பாருங்கோள். (பாதேந கமலா ந ப்ரஹ்மருத்ரார்ச்சிதேந) "பின்னிட்டசடையானும் பிரமனு மிந்திரனும் துன்னிட் புகலரிய;" "நாத்தழும்பநான்முகனுமீசனுமாய் முறையாலேத்த." [திருக்குருகூரத ள்பரன்] மநுஷ்யத்வே பரத்வத்துக்கும் அவ்வருகே ஒரு பரத்வமிறே இது. இவ்வரு போரப்போர உத்கர்ஷம் மிகுமத்தனை. குணத்தாலேயிறே வஸ்துவுக்கு உத்கர்ஷம்; ணாதிக்யமுள்ளது இங்கேயிறே. [அதனுள் பரன்] (அநச்நந்நந்ய:) என்று சேதநர் ப்ர நதியோடே கலசக்கலச ஒளிமழுங்கி வாராநிற்கச்செய்தே, அவனுக்கு நியாமகத்வத் ல் வந்த புகர் அறவிஞ்சிவருமாபோலே; ஸம்ஸாரிகள்நடுவே போரப்போரவாயிற்று த்வம் ப்ரகாசிப்பது. [திறமன்றி] அவனுக்கு ப்ரகாரமாயல்லது. திறம் ப்ரகாரம். தெய்வமற்றில்லை] தேவதைகளுடைய ஸ்வரூபநிஷேதம் பண்ணுகிறானன்றிறே, 'அவ க்கு விபூதி வேணும்' என்றிருக்கிறவராகையாலே; அவர்களுடைய ஸ்வாதந்த்ர்யநிஷே ம் பண்ணுகிறார். ஸ்வதந்த்ரமாய் தனக்கு உரித்தாயிருப்பதொரு தேவதையில்லை, அவ னுக்கு ப்ரகாரபுத்தி பண்ணி ஆச்ரயித்திகோளாகில் அவனுடைய ஆச்ரயணத்திலே தும்; ஸ்வதந்த்ரபுத்திபண்ணி ஆச்ரயித்திகோளாகில் ஸ்வதந்த்ரமாயிருப்பதொன்றில்லை; நேஹ நாநாஸ்தி) (யே யஜந்தி) இத்யாதி. [பேசுமினே] நான் 'அவனுக்கு ப்ரகாரமா ல்லது ஸ்வதந்த்ரமாயிருப்பதொரு தேவதையில்லை' என்றேன்; 'இப்படி அநந்யாதீநமா ருக்கிற நியாமகத்வத்தை யுடையனாயிருக்கிற இவனைத் தனக்கு ப்ரகாரமாகவுடைய தொரு தைவமுண்டு' என்று சொல்லவல்லார் உண்டாகில் வாய்படைத்தார் என்முன்னே ன்று சொல்லிக்காணுங்கோள் என்கிறார். ... ... (3)

நாலாம்பாட்டு. வ்யோமாதீத நையாயிக வைசேஷிகாதிகள் வந்து ப்ரத்யவஸ்த் தராய், "ஜகத்து ஸாவயவத்வாத் கார்யரூபமாயிராநின்றது; ஆகையாலே, இதுக்கு ஒரு ர்த்தாவேணும்; இஜ்ஜகத்துத்தான் விசித்ரஸந்நிவேசத்தை யுடைத்தாயிருக்கையாலே துக்குத் தக்க (உபாதாநோபகரணஸம்ப்ரதாந ப்ரயோஜநாபிஜ்ஞ: கர்த்தா) என்கிற டியே உபாதாநமும் உபகரணமும் ஸம்ப்ரதாநமும் ப்ரயோஜநமும் அறிகைக்கீடான சித்ரமான ஜ்ஞாநசக்த்யாதிகளை யுடையனாயிருப்பானொருவன் கர்த்தாவாகவேணும்" ன்று இங்ஙனே அநுமாநத்தாலே ஒருவனைக் கல்பித்து, வேதத்தை ஆப்தவசநமாக்கி துக்கு ஸஹகாரிக்கிறதாகக்கொண்டு அநுமாநப்ராதாந்யத்தாலே ஈச்வரனை ஸாதித்து, வனைகிறான், 'ஈசன், ஈசானன்' என்று இங்ஙனே வேதத்திலே ப்ரஸித்தவந்நிர்த்தேச ண்டா யிராநின்றது; இந்த ஸமாக்யையாலே அவற்றால் சொல்லப்படுகிற அவனே ஈச் ரனாகிறான்' என்று அநுமாநத்தாலும் ஸமாக்யையாலுமாக பகவத்வ்யதிரிக்தனொருவ னுக்கு உத்கர்ஷத்தை ஸாதித்தார்கள்; அவர்களைப்பார்த்து: 'நீங்கள் சொல்லுகிற அநு

மாநம் ச்ருதியின்முன்பு நேர்நில்லாது; லிங்கத்தின்முன்பு ஸமாக்யை நேர்நில்லாது' என் ச்ருதி லிங்கங்களாலே அநுமானத்தையும் ஸமாக்யையையும் தள்ளி பகவத்பரத்வத் ஸாதிக்கிறார். அதுசெய்கிறவழிதான் என்? என்னில். (யத் வேதாதௌ) வேதாதியி வேதாந்தத்திலும் சொல்லப்பட்ட ஸ்வரமாகிறது ப்ரணவம்: லோகத்தில் வாசகஜா மண்டிய அதிலே லீநமாயிருக்கிறது; அதுதான் ஸ்வப்ரக்ருதியான அகாரத்திலே லீந யிருக்கிறது; அதுக்கு வாச்யதயாபரனாயிருக்கிறான் யாவனொருவன், அவன் மஹேச்வர என்கிற ச்ருதியாலும்; 'ஈசன், ஈசாநன்' என்கிற ஸமாக்யைகளால் தோற்றுகிறவர்களு தலையறுப்புண்பாரும் தலையறுத்துப் பாதகியாய் நிற்பாருமாயிராநின்றார்கள்; இவ அவர்களுக்கு துக்கநிவர்த்தகனாயிராநின்றான்; ஆனால் அவர்களை 'பரன்' என்னவோ இவனை 'பரன் என்னவோ? என்று, ச்ருதியாலும் லிங்கத்தாலுமாக அநுமானத்தையு ஸமாக்யையையும் தள்ளி பகவத்பரத்வத்தை ஸ்தாபிக்கிறார். ஆக, இப்படிகளாலே ஸகலோபநிஷத் ப்ரஸித்தனான நாராயணனே பரதத்த்வம் என்று நிஷ்கர்ஷித்து காலாத் யாபதிஷ்டமாகிற தூஷணத்தாலே அவர்களை நிராகரிக்கிறார்.

> பேசநின்றசிவனுக்கும் பிரமன்தனக்கும்பிறர்க்கும்
> நாயகனவனே* கபாலநன்மோக்கத்துக்கண்டுகொண்மின்*
> தேசமாமதிள்சூழ்ந்தழகாய திருக்குருகூரதனுள்*
> ஈசன்பாலோரவம்பறைதல் என்னாவது? இலிங்கியர்க்கே. (4)

[பேசநின்ற சிவனுக்கும்] 'நீர் ச்ருதி சொன்னீராகில் நாங்களும் ஒரு ச்ரு சொல்லுகிறோம்' என்று; 'அநந்யபரமான நாராயணாநுவாகஸித்தன்' என்று நான்சொ னால் அதுக்கு ப்ரதியாக, புறம்பே விநியுக்தமாய் கர்மவிதிசேஷமாயிருப்பன சில அர்த் வாதங்களாலும் தாமஸபுராணங்களாலும் சொல்லலாம்படி முட்டுப்பொறுத்து நின் ருத்ரனுக்கும்; நீங்கள் 'பரன்' என்று பேசுகிற ருத்ரனுக்கும் என்னவுமாம். அர்த்த முட்டுப்பொறுது; பேசுகைக்கு ஆலம்பநமாத்ரமே உள்ளதென்கை. அல்லாதாரை 'ஈ வரர்கள்' என்னுதே இவர்களைச் சொல்லலாம்படி யிருக்கிறது ஒரேற்ற முண்டிறே. [பி மன் தனக்கும்] அவனுக்கும் ஜநகனான ப்ரஹ்மாவுக்கும். (ப்ரஹ்மண:புத்ராய ஜ்யேஷ்டா ச்ரேஷ்டாய) என்றும், (ப்ரஹ்மணச்சாபிஸம்பூதச்சிவ:) என்றும் சொல்லா நின்றதிறே ருத்ரனுடைய ஈச்வரத்வம் பகவத்ப்ரஸாதாயத்தம். (மஹாதேவஸ்ஸர்வமேதேமஹாத்ம ஹுத்வாத்மாநம் தேவதேவோ பபூவ), [பிறர்க்கும்] இவர்தந்திருவுள்ளத்தால் அவ ளோடு இவர்களோடு வாசியற்றிருக்கிறபடி. அவர்கள் தாங்கள் தங்கள் நினைவாலு அப்படியேயிறே, (தவாந்தராத்மா மம ச யேசாந்யே தேஹிஸம்ஜ்ஞிதா:) என்றானிறே ருத்ரனைநோக்கி ப்ரஹ்மா. [பேசநின்ற சிவனுக்கும் பிரமன்தனக்கும் பிறர்க்கும் நாயக னவனே] இக்கார்யத்துக்கு அநுரூபமான காரணத்தைக் கல்பிக்கிலும் அவனையே கொள்ளவேணும். அவனே யென்று ச்ருதிப்ரஸித்தி. அநந்யபரமான நாராயணாநுவா ப்ரஸித்தியையும், (ய:பரஸ்ஸமஹேச்வர:) என்கிற அகாரார்த்த ப்ரஸித்தியையும், நினை கிறார். 'அவனே' என்பானென்? இவனையும் ஒக்கச் சொல்லாநிற்கவென்னில், [கபாலந மோக்கத்துக் கண்டுகொண்மின்] என்று கையோடே காட்டிக்கொடுக்கிறார், நீங்க இப்படி சொன்னால் மறுமாற்றம்சொல்லுகைக்கு இதொன்று உண்டாகப்பெற்றோமே (தத்ர நாராயணச்ரீமாந் மயாபிக்ஷாம்ப்ரயாசித:) 'தாந்தாம்பண்ணின கர்மபலம் தாந்தா அநுபவிக்கிறார்களாகில் நாமென்? என்றிருக்கும் ஈச்வரஸ்வாதந்த்ர்யம் ஜீவியாதபடி (நகச் சிந்நாபராத்யதி) என்பாரும் அருகேயுண்டென்கிறான். (விஷ்ணுப்ரஸாதாத் ஸுச்ரோணி



லம் தத்ஸஹஸ்ரதா | ஸ்புடிதம் பஹுதாயாதம் ஸ்வப்நலப்தம்தநம்யதா) (ஸுச் ணி) உன்வடிவழகால் வந்த ஸௌபாக்யம் நான் ஸர்வேச்வரன் பக்கலிலே சென்ற விலே உதவிற்றுக்காண். (ஸ்வப்நலப்தம்) அநுபவம் செல்லாநிற்கச் செய்தே விழித் பார்க்கும் காட்டில் இல்லையாயிருந்தது; ஆகையாலே, நன்மோக்கம் என்கிறது. உங் க்கு இப்போது மறுமாற்றம் சொல்லலாம்படியாக இதொன்று உண்டாயிற்றென் ராதல். (ஸ்வப்நலப்தம் தநம் யதா) என்று போனவழி தெரியாமே போயிற்றென் ல். நீங்கள் ஈச்வரர்களாக சங்கித்தவர்களிருவரும் நின்ற நிலை கண்டதே; ஒருவன் கெட்டு நின்றான், ஒருவன் ஓடிகொண்டு ப்ராயச்சித்தியாய் நின்றான். ஓட்டையோடத் டு ஒழுகலோடமாய், உங்கள்குறை தீரப்பற்றுகிற நீங்கள் உங்களிலும் பெருங் றவாளரையோ பற்றுவது? 'பாதகியாய் பிக்ஷுபுக்குத் திரிந்தான்' என்று நீங்களே ல்லிவைத்து, அவனுக்கே பரத்வத்தைச் சொல்லவோ? ஒருவனுடைய ஈச்வரத்வம் யோடே போயிற்று, மற்றவனுடைய ஈச்வரத்வம் அவன் கையோடே காட்டிக் டுக்கிறார்; [கண்டுகொள்மின்] உந்தாமகங்களிலே நீங்கள் எழுதியிட்டுவைத்த க்ரந் களைப் பார்த்துக்கொள்ள மாட்டிகோளோ? முன்னே நின்று பிதற்றுதேயென்கிறார்.

[தேசமாமதிள் இத்யாதி] சத்ருக்களுக்கு அநபிபவநீயமான தேஜஸ்ஸையுடைத் , அரணாகப்போரும்படியான மதிளையுடைத்தாய். தர்சநீயமாயிருக்கிற. [திருக்குரு தனுள் ஈசன்பால்] அஜஹத்ஸ்வபாவனாகையாலே, ஸௌலப்யத்திலே அம்மேன் குலையாதிருக்கிறபடி. [ஈசன்பால்] (ய:பரஸ்ஸமஹேச்வர:) என்கிற ஸர்வேச்வரன் ளிலே. கீழே நாராயணசப்தார்த்தை ப்ரஸ்தாவித்துவைத்து, அகாரவாச்யனைப் பர னையே மஹேச்வரனென்கையாலே, நாராயணனே மஹேச்வரசப்தவாச்யனென்று தியாலே ஸித்தமாயிருக்கையால். இந்த ச்ருதியாலே உன்னுடைய அநுமானம் அபஹ விஷயம்; 'கண்டுகொண்மின்' என்கிற அர்த்தஸாமர்த்யத்தோடு விரோதித்த ஸமாக் ஜீவியாது: ஆகையால், இவனே பர னென்கிறார். [ஓர் அவம்பறைதல்] மற்றுள்ள த்ரஜ்ஞரோடொக்க அநீச்வரத்வ ஸாதகமாக ஏதேனும் ஓராபாஸயுக்திகளைச் ல்லுமது. அது தம்வாயால் சொல்லமாட்டாமையாலே, 'அவம்' என்கிறார். [பறை ] ஸ்வகோஷ்டிகளிலே ரஹஸ்யமாகச் சொல்லுமதொழிய ஸதஸ்யமன்றிக்கே யிருக் . (யதா மே சிரஸச்சேதாதிதம் குருதரம்வச:) மஹாபலி ஸ்ரீப்ரஹ்லாதாழ்வான் பக்க ல வந்து 'ராஜ்யமடைய ஒளிமழுங்கி வாராநின்றது; என்பலமும் குறைந்து வாரா றது, இதுக்கு அடியென்?' என்ன, 'நீ ஸர்வேச்வரன்பக்கல் பண்ணின அபராதத் லேகாண்' என்ன (கோயம்விஷ்ணு:) என்றாற்போலே சில அநாதரோக்திகளைப் ண, என்தலையை யறுத்து என் கையிலே தந்தாயாகில் 'என்பேரன்பண்ணின உப ம்' என்று இருக்கலாயிற்று, 'என் முன்பே பகவந்நிந்தையைப் பண்ணினாய், நீ ஜ்யப்ரஷ்டனாவாய்' என்று சபித்துவிட்டான். இத்தை இப்படியே பட்டர் அருளிச் ப்தவாறே, 'ப்ரக்ருதிபுருஷவிவேகம் பண்ணியிருக்கிற இவன் ஆத்மாவுக்கு ஸங்கோ வருவதொன்றை சபியாதே (ராஜ்யப்ரஷ்டஸ்ததாபத) என்பானென்? என்றுகேட்க, யைத் தண்டிக்கையாகிறது அமேத்யத்தை விலக்குகையன்றோ, சாந்தை விலக்குகை க்கு அநபிமதமன்றே; இவனுக்கு அநிஷ்டம் செய்கையாவது இதிறே' என்றுஅருளிச் ந்தார். [என்னாவதிலிங்கியர்க்கே] ஆநுமாநிகர்க்கு என்ன ப்ரயோஜநமுண்டு? அந்தத் வதைக்கு உத்கர்ஷம் பெற்றிகோளன்று. ஸமாச்ரயணத்துக்கு ஒரு பலம் பெற்றி

கோளன்று, உங்களுக்கு இத்தாலே தான் ஒரு உத்கர்ஷம் பெற்றிகோளன்று, என்றி
பட்டிகோள்? என்கிறுர். ... ... ... ... (4)

அஞ்சாம்பாட்டு. லிங்கபுராணம் தொடக்கமான குத்ருஷ்டிஸ்ம்ருதிகளையு
பாஹ்யஸ்ம்ருதிகளையும் ப்ரமாணமாகக் கொண்டு வந்தவர்களை நிஷேதிக்கிருர்.

**இலிங்கத்திட்டபுராணத்தீரும் சமணரும்சாக்கியரும்***
**வலிந்துவாதுசெய்வீர்களும் மற்றுநுந்தெய்வமுமாகிநின்ருன்***
**மலிந்துசெந்நெல்கவரிவீசும் திருக்குருகூரதனுள்***
**பொலிந்துநின்றபிரான்கண்டீர் ஒன்றும்பொய்யில்லைபோற்றுமினே. (5)**

[இலிங்கத்திட்ட புராணத்தீரும்] ராஜஸமாயும் தாமஸமாயுமுள்ள புராண
களுக்கு ஸாத்த்விக புராணங்களிற்காட்டில் வாசி இதுவாயிற்று. அவற்றினுடை
நிஷ்கர்ஷம் அந்த அந்தப் புராணங்களினுடைய உபக்ரமத்திலே காணலாயிருக்கு
(யங்மயஞ்ச ஜகத் ப்ரஹ்மங்) என்று பொதுவிலே ப்ரச்நம்பண்ண, (விஷ்ணோஸ்ஸகாச
துத்பூதம்) என்றுகொண்டு கோல்விழுக்காட்டாலே பரிஹாரமாயிருக்கையன்றிக்கே
ஒருவ்யக்தியை நிர்த்தேசித்து 'அதுக்கு உத்கர்ஷத்தைப் பண்ணித்தரவேணும்' என்
சொன்னவனும் தமோகுணபிபூதனும் தமோகுணபிபூதனுய்ச் சொல்லி கேட்டவனும் தமோகுணபிபூதனு
கேட்க, ஒருலிங்கவிஷயமாக இடப்பட்ட புராணமாயிற்று, 'இளிகண்ணனைப் புண்ட
காக்ஷுகைக் கவிபாடித் தரவேணும்' என்றும், 'எருமையை யானையாகக் கவிபாடி
தரவேணும்' என்றும் சொல்ல, அப்படியே கவிபாடுவாரைப்போலே யிருப்பதொ
றிறே அவர்களுக்கு இல்லாத உத்கர்ஷங்களையிட்டுச் சொல்லுமது; தான் சொல்
புக்க வஸ்துவுக்கு உத்கர்ஷத்தை ஸாதிக்கமாட்டாதே, மற்றுள்ளவற்றினுடைய உ
கர்ஷத்தைக் கழிக்கமாட்டாதே யிருப்பதொன்ருயிற்று, [சமணரும்] ஆர்ஹதரு
[சாக்கியரும்] பௌத்தரும் [மற்றும் வலிந்துவாதுசெய்வீர்களும்] உத்க்ருஷ்டத
மான ப்ரமாணத்தை அங்கீரித்துக்கொண்டு நின்று ப்ரமாணநுக்ராஹகமான தர்க்க
களையொழியக் கேவலதர்க்கங்களைக்கொண்டு அர்த்தத்தை ஸாதிக்கப் பார்க்கும் பா
யரில் சேஷித்துள்ளாரும். (யா வேதபாஹ்யாஸ்ஸம்ருதய:) இத்யாதியாலே தாம
வம் எல்லார்க்கும் அவிசிஷ்டமிறே; ஆகையாலே, பாஹ்யகுத்ருஷ்டிகளை யொக்க
சொல்லுகிறது. [நுந்தெய்வமுமாகிநின்ருன்] உங்களோடு நீங்களாச்ரயிக்கிற தே
தைகளோடு வாசியற ஆத்மதயா நின்ருன். நீங்கள் அவ்வவர்க்கு உத்கர்ஷம் சொ
லும்போது பகவத்பரத்வத்தை அங்கீகரித்துக்கொண்டு நின்று சொல்லவேணு
அதுக்கு அடியென்? என்னில்; அவ்வவருடைய ஸ்வரூபஸ்திதியாதிகள் அவனதீந
யிருக்கையாலே. இனித்தான் பக்ஷங்கள்தோறும், 'ஸர்வஜ்ஞன்' 'ஈச்வரன்' என்
போலே ஒரோதேவதைகளையும் கொள்ளக்கடவர்களாயிருக்குமிறே. 'அவர்களுடை
ஸ்வரூபஸ்தித்யாதிகள் அவனதீநம் என்ற இது ஸ்வபக்ஷத்தாலே சொல்லுகிறதோ
பரபக்ஷத்தாலே சொல்லுகிறதோ வென்னில்; இரண்டுமொழிய ப்ரமாணகதியா
சொல்லுகிறது. ஒருதேவதைபக்கலிலே அதிமாநுஷமாயிருப்பதொரு வ்யாபாரத்தை
கண்டு, 'இதுக்கு அடியென்?' என்ன. (விஷ்ணுராத்மா பகவதோ பவஸ்ய) என்று
வேச்வரன் அந்தராத்மாவாய் நிற்கையாலே யென்றதிறே; அதர்வசிரஸ்ஸிலே நின்
ருத்ரன், ஸர்வேச்வரன் தன் ஸர்வாத்மபாவத்தைச் சொல்லுமாபோலே தன்படிகளை
சொல்லா, 'அவன்தானே இங்ஙனே சொல்லுகைக்கு அடியென்?' என்றுசங்கியா, (வே
தராதந்தரம் ப்ராவிசத்) என்று பரமாத்மப்ரவேசத்தாலே சொன்னே னென்ருனி



த்தஸ்ஸர்வமஹம்ஸர்வம்) என்ருனிறே ப்ரஹ்லாதன்; ப்ரஹ்லாதன்பக்கல் பரத்வமுண்
மன்ருயிற்று, இவர்கள்பக்கல் பரத்வமுள்ளது. [மலிந்து இத்யாதி] இப்படி ஸர்வாந்
ாத்மாவாயிருக்கிற ஸர்வேச்வரன் 'அஸங்நிஹிதன்' என்னும் கண்ணழிவு மில்லாதபடி
ருநகரியிலே வந்து ஸங்நிஹிதனுனன். ஸர்வஸமாச்ரயணீயனுன அவன் இங்கே
ந்து நிற்கையாலே, சேதநாசேதந விபாகமற, (ஸ்ருஷ்டஸ்த்வம் வநவாஸாய) என்று
ால்லப்பட்ட இளையபெருமாளைப்போலே அநுகூலவ்ருத்திகளைப் பண்ணுநிற்குமா
ற்று, செந்நெலானது கதிர்க்கனத்தாலே அவ்வருகுக்கு இவ்வருகு அசைகிறபோது
மரைவீசினுற்போலே யாயிற்று இருப்பது. [பொலிந்துநின்றபிரான்கண்டீர்] பரம
த்தைவிட்டு ஸம்ஸாரிகள்நடுவே வந்து புகுந்தவிடத்தில் அவர்கள் படுகிற க்லேசத்
த் தானும் ஒக்கப்படுகையன்றிக்கே ஸ்வரூபரூப குணவிபூதிகள் இவ்வருகே போரப்
ார மேன்மேலென விஞ்சிவாராநின்றதாயிற்று, சொன்னுர்சொன்ன யுக்திகளுக்கு
வ்வருகாயிருக்கு மென்னுதல். [ஒன்றும் பொய்யில்லை] இதரதேவதைகளுக்குச்
ால்லும் உத்கர்ஷம் ஒன்ருெழியாமல் பொய்யாயிருக்குமாபோலே. இவ்விஷயத்
ச்சொல்லுமவற்றில் ஒன்றும் பொய்யில்லை. அவ்வோதேவதைகளுக்கு ஸ்வத:
த்கர்ஷமில்லாமையாலே மெய்யொன்று மில்லை; இவனுடைய உத்கர்ஷத்துக்கு
வதியில்லாமையால் பொய்சொல்லுகைக்கு அவகாசமில்லை. [போற்றுமினே] நீங்
அபேக்ஷியாதிருக்க. நானே இப்படி சொல்லுகிறது. எனக்கு உங்கள்பக்க லுண்
ன அநுக்ரஹாதிசயத்தாலேயிறே; அவ்வநுக்ரஹகார்யம் பிறக்கவேணுமே: க்ர
த்திலே செய்கிறேும் என்று ஆறியிராதே சடக்கென அவன்திருவடிகளை ஆச்ரயிக்கப்
ருங்கோள். ... ... ... ... (5)

ஆரும்பாட்டு. பகவத்பரத்வம் நீர் அருளிச்செய்யக் கேட்டபோது வெளிச்சிறத்து
ல்லாதபோது தேவதாந்தர ப்ராவண்யம் உண்டாகா நின்றது; இதுக்கு அடி எது?
ன, உங்கள் பாபமென்கிருர். எம்பெருமானே ஸர்வேச்வரனுகில் எங்களை தேவதாந்
ப்ரவணராக்கிவைப்பானென்? என்ன; உங்களை இங்ஙனே வைத்தது ஸதஸத்கர்ம
ரிகளான ஜந்துக்கள் அவ்வோ கர்மாநுகுண பலங்களையநுபவிக்கக்கடவதான சாஸ்த்ர
யாதை யழியுமென்று; ஆனபின்பு, அத்தையறிந்து எம்பெருமானை ஸமாச்ரயித்து
வன் வஞ்சநத்தைத் தப்புங்கோள் என்கிருர்.

**போற்றிமற்ருேர்தெய்வம் பேணப்புறத்திட்டு உம்மைஇன்னே***
**தேற்றிவைத்தது எல்லீரும்வீடுபெற்ருல்உலகில்லையென்றே***
**சேற்றிற்செந்நெல் கமலமோங்கு திருக்குருகூரதனுள்* (6)**
**ஆற்றவல்லவன்மாயங்கண்டீர் அதறிந்தறிந்தோடுமினே.**

[போற்றி] நான் பகவத்விஷயத்தில் செய்யுமதடைய நீங்கள் இதரதேவதைகள்
கலிலே செய்து போருவுதிகோள்; உங்கள்பக்கல் ஒருகுறையில்லை; அப்ராப்தமான
வே குறை. [மற்ருேர்தெய்வம்] (யேப்யந்யதேவதாபக்தா:) என்னுமாபோலே.
பண] அவை தனக்கென்ன ஒன்றில்லாமையாலே, ஆச்ரயிக்கிற உங்களுக்கே பரமிறே.
வற்றுக்கு உத்கர்ஷத்தை ஸாதிக்கை. [புறத்திட்டு] தனக்குப் புறம்பாம்படி பண்ணி,
ம்மை இன்னே தேற்றிவைத்தது] உங்களை இப்படியே தெளியும்படி பண்ணிவைத்
. (நபிபேதி குதச்சந) என்கிறபடியே நான் மேல்வரும் அநர்த்தங்களுக்கு அஞ்சாதே
ப்பரனுயிருக்கிருப்போலே, ஓட்டையோடத்தோடு ஒழுகலோடமான இதரதேவதை
ஆச்ரயித்து உங்களுக்கு அவர்கள் பக்கலிலே ருசி விச்வாஸங்க ளுண்டாம்படி

Filmed as bound

பண்ணிவைத்தது. [எல்லீரும் இத்யாதி] எல்லாரும் இருந்ததே குடியாக மோக்ஷத்தை
பெற்ருல், லீலைக்கு அடியான சாஸ்த்ரம் நிரர்த்தகமாய்விடும். ஸத்கர்மத்தைப் பண்ணு
வாரும் அஸத்கர்மத்தைப் பண்ணுவாருமாயிறே நாடுதான் இருப்பது: பாபம்பண்
ணினவர்களும் புண்யம்பண்ணினவர்களுடைய பலத்தை யநுபவிக்குமன்று, (புண்ய
புண்யேந கர்மணு பாப:பாபேந) என்கிற சாஸ்த்ரமர்யாதை குலையுமென்கை, பாப
பண்ணினவர்கள் அதின்பலத்தை அநுபவிக்கவும், புண்யம் பண்ணினுர் அதின்
பலத்தை அநுபவிக்கவுமாகிற சாஸ்த்ரமர்யாதை குலையாதபடியாக. (அதோஸ்
லோகேவேதேச ப்ரதித:புருஷோத்தம:) என்கிறவிடத்தில். லோகசப்தத்தால் ப்ரம
ணத்தைச் சொல்லிற்றென்று கொண்டவோபாதி, இங்கும் லோக சப்தம் சாஸ்த்ரத்தை
சொல்லுகிறது. [சேற்றில் இத்யாதி] அவ்வூரிலே பதார்த்தங்களில் ஒன்றிலொன்
குறைந்திருப்பதில்லையாயிற்று. "உறம்பெற்றமலர்க்கமலம்" இத்யாதிபோலே. அவ்வூரி
பதார்த்தங்களுள்ளவையடைய ஒன்றுக்கொன்று இசலி வளராநிற்கும். [ஆற்றவல்
வன்] மிகவும் வல்லவன். அதிசயிதசக்திகன். ஸம்பந்தமொத்திருக்கச்செய்தே, புண்ய
பண்ணினுர் அதின்பலம் அநுபவிக்கவும் பாபம்பண்ணினுர் அதின்பலம் அநுபவிக்கவு
பண்ணவல்லவன். [மாயங்கண்டீர்] (மமமாயாதுரத்யயா) என்கிறபடியே தான் அகற்
நினைத்தாரைத் தன்பக்கல் வந்துகிட்டாதபடி ப்ரக்ருதியையிட்டு வஞ்சித்துவைத்தப
கிடிகோள். [அது அறிந்து] இது அவனுடைய மாயமென்னுமத்தை அறிந்து. [அ
தோடுமினே] (மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாந்தரந்தி தே) என்கிறபடி
மாயாதரணேபாயமான ப்ரபத்தியையும் தானே அருளிச் செய்துவைத்தான்; அத்
யறிந்து, அவ்வழியாலே அவனைப்பற்றித் தப்பப் பாருங்கோள் இந்த மாயையை. இ
அவன் செய்துவைத்ததான பின்பு, அவனை வெல்லவேண்டில் அவனேடு பிரிய நின்
வெல்லப்பாராதே அவனையே காற்கட்டி இத்தைத்தப்பப் பாருங்கோள். ... (

ஏழாம்பாட்டு. 'அது செய்கிருேம். இதரதேவதைகளுக்கும் சில உத்கர்ஷமுண்
என்று நெடுநாள் அவற்றுக்குப் பச்சையிட்டுப் போந்தோம்; அப்பச்சை வெறுமனு
மே இன்னம் சிலநாள் அவை பலிக்கும்படி கண்டு பின்னை பகவத்ஸமாச்ரயணம் பண்ணு
கிருேம்' என்ன, 'அவையும் எல்லாம்செய்து கண்டிகோளிறே; இனி அமையும் காணு
கோள்' என்கிருர்.

**ஓடியோடிப்பலபிறப்பும்பிறந்து மற்ருேர்தெய்வம்***
**பாடியாடிப்பணிந்து பல்படிகால்வழியேறிக்கண்டீர்***
**கூடிவானவரேத்தநின்ற திருக்குருகூரதனுள்***
**ஆடுபுட்கொடியாதிமூர்த்திக்கு அடிமைபுகுவதுவே.**

[ஓடியோடி இத்யாதி] (கதாகதம் காமகாமா லபந்தே) என்கிறபடியே, போவ
ஜந்மங்களோடே வருவதாய்த் திரிந்ததித்தனையிறே. [பல பிறப்பும் பிறந்து] ஆத்
நித்யன்; அசித்தும் அப்படியே; அசித்ஸம்ஸர்க்கமும் நித்யமாய், கர்ம ப்ரவாஹத்தா
ஜந்மபரம்பரையும் உருவப்போருகிறது: நீங்கள் முன்னும் பின்னும் அறியாமலிறே 'இ
ஒரு ஜந்மமே யுண்டாயிற்று' என்று இருக்கிறது. [மற்று ஓர் இத்யாதி] இப்
அநாதியாய்ப் போருகிற ஜந்ம பரம்பரைகளில் ஒரு ஜந்ம மொழியாமல் இதர தேவ
ஸமாச்ரயணம் பண்ணிப்போந்திகோள். அது செய்கிற விடத்தில் த்ரிவித கரண
ளாலும் செய்தும், ஆச்ரயணத்தில் குறையால் பலியாதிருந்ததன்று, அதில் கு
யில்லை. ப்ரீதிப்ரேரிதராய்ச் சொல்லி, அவ்வளவில் பர்யவஸியாதே விக்ருதராய், (ம



மஸ்குரு) என்று பகவத் விஷயத்தில் அவகாஹிக்குமளவும் உட்புகுந்து. [பல்படிகால்]
ருபடியாச்ரயித்துவிட்டிகோளோ? அநேகம் ப்ரகாரங்களாய் ஆச்ரயித்து, [வழி
யறிக்கண்டீர்] அத்தேவதைகளை ஆச்ரயிக்கச் சொன்ன சாஸ்த்ரமர்யாதை தப்பாமல்
ச்ரயித்து அதன் பலமும் கண்டிகோளன்ருே? 'பல்படிகால் வழியேறிக் கண்டீர்' என்
கக்கு, 'இவர்கள் ஒரு ஜந்மத்திலும் பகவத்ஸமாச்ரயணம் பண்ணிற்றிலர்கள்' என்று
றிந்தபடி எங்ஙனே இவர்? என்னில்; இப்போது தாம் இவ்வர்த்தம் உபதேசிக்க
வண்டும்படி இவர்களிருக்கக் காண்கையாலே, 'இதுக்கு முன்பு பகவத்ஸமாச்ரயணம்
ண்ணிற்றிலர்கள்' என்று அறியத் தட்டில்லையிறே: (மோக்ஷமிச்சேஜ்ஜநார்த்தநாத்)
ன்கிறபடியே பகவத்ஸமாச்ரயணம் பண்ணினுர்களாகில் முக்தராவர்களிறே. இதர
தவதாஸமாச்ரயணம் பண்ணுகையாலே இவ்வளவும் வர ஸம்ஸரித்துப்போந்திகோள்.
ரஹ்மாணம் சிதிகண்டஞ்ச] இத்யாதி, (ப்ரதிபுத்தா நஸேவந்தே). 'மோக்ஷபலம்
த்திக்கவேணும்' என்றிருக்கிறவர்கள் க்ஷுத்ர தேவதைகளைப் பின்செல்லார்களிறே;
துக்கு அடி அவை தரவல்லது அநித்யபலங்களாகையாலே. (ஸ்கந்தருத்ரமஹேந்த்
த்யா: ப்ரதிஷித்தாஸ்து பூஜநே) என்றதிறே. (த்வயாபி ப்ராப்தம்) இத்யாதி: ஒருவன்
கவத்ஸமாச்ரயணம் பண்ணுநிற்கச் செய்தே. 'இவன் ஸமாதி நின்ற நிலை அறிய
வணும்' என்று பார்த்து ஸர்வேச்வரன் இந்த்ரவேஷ பரிக்ரஹம் பண்ணி ஐராவதத்
லே ஏறி வந்து முன்னே நின்று, 'உனக்கு வேண்டுவதென்?' என்ன, 'ஒருபுழுவும்
னுமாய் வந்து நிற்கிறவன் ஆர்'? 'என்ருன்; ஸர்வேச்வரன் பெரிய திருவடியை மேற்
காண்டு வந்தான்' என்னுமிடம் அறியானிறே, கொண்டுவந்த வேஷம் இதுவாகை
லே; அவனைப் பார்த்து, 'நீ யாவனெருவனை ஆச்ரயித்து இந்த ஐச்வர்யமடையப்
பற்ருய், அப்படிப் பட்டவனைக் காண் நான் ஆச்ரயிக்கிறது; இப்படி வழி போவார்க்
கல்லாம் பச்சையிட்டுத் திரியுமவனல்லேன்காண்; இப்போது முகங்காட்டாதே போக
ல்லையே பிரானே! உன்னைக் கும்பிடுகிறேன்' என்ருனிறே. பகவத்ஸமாச்ரயணம்
ண்ணி ஜ்ஞாநாதிகரா யிருப்பா ரொருவர் இருந்து தம்முடைய வஸ்த்ரத்தைப் புரையா
ன்ருராய், அவ்வளவிலே தேவனும் தேவியுமாகப் போகா நிற்க அநாதரித்திருந்தாராய்,
தவியானவள், 'நீர் ஸர்வாதிகரா யிருக்க, உம்மைக் கண்ட விடத்தில் இவன் அநாத
த்துக் காலை நீட்டிக்கொண்டிருந்தானே' என்ன, 'அவன் பகவத்பக்தன் போலே காண்'
ன்ன, 'அதுதான் இருக்கிறபடி அறிவோம்' என்று இருவரும் இவர்பக்கலிலே வந்து,
என்? தேவர்களை மநுஷ்யர்கள் கண்டால் அநுவர்த்தித்து வேண்டும் வரங்களும்
வண்டிக்கொள்ளக் கடவர்களா யிருப்பர்கள்; நீ நம்மைக் கண்டவிடத்தில் நீட்டின
லை முடக்குதல், சில உபசாரங்களைப் பண்ணுதல், சிலவற்றை வேண்டிக்கொள்ளுதல்
சய்யாதே யிருந்தாயீ' என்ன, 'அழகிது! அவை யெல்லாம் செய்யக்கடவேன், மோக்ஷம்
லாமோ?' என்ன, 'அது நம்மாலே செய்யலாமதன்று; பகவத்ஸமாச்ரயணம் பண்ணி
வன் ப்ரஸாதத்தாலே பெறவேணும்' என்ன, 'ஆகில், இன்று சாவாரை நாளைச் சாவப்
ண்ணலாமோ'? என்ன, 'அதுவும் கர்மாநுகுணமாயிறே யிருப்பது: நம்மால் செய்யப்
பாகாது' என்ன, 'ஆகில், நீ செய்யுமது, இவ்வூசி போனவழியே நூலும்போம்படி
நுக்ரஹித்து நடக்குமித்தனை' என்ன, தேவனும் கோபத்தாலே நெற்றியிற் கண்ணைக்
ட்ட. இவரும் காலிலே அநேகங் கண்ணை உண்டாக்கிக் காட்டினுர். [கூடி இத்யாதி]
ங்கள் ஆச்ரயிக்கிற தேவதைகள் இவ்வளவும் உங்களைக் கும்பீடுகொண்டு, இத்தனை
ாதுபோய் அங்கே ஆச்ரயியா நிற்பர்கள். அவர்கள் செய்கிறவற்றைக் கண்டாகிலும்

நீங்களும் அவனை யாச்ரயிக்கப் பாருங்கோள்; தலையறுப்பாரும் அறுப்புண்பாருமா
க்ராமணிகளைப் போலே ஒருவரை யொருவர் வேரோடே அலம்பிப்போகடவேண்டு
படியான விரோதம் செல்லா நிற்கச்செய்தேயும்; ஆபத்து எல்லார்க்கு மொத்திருக்கை
யாலே எல்லாரும் ஒரு மிடருய் ஆச்ரயிப்பர்கள். பரஸ்பர விரோதமுங் கிடக்கச்செய்
'ஊராகக் கூடிவந்தது' என்பார்களிறே. [ஆடுபுட் கொடி] வெற்றிப்புட்கொடி. ஆ
வெற்றி. வெற்றிப்புள்ளைக் கொடியாக வுடையவன். 'ஸர்வேச்வரவாஹநம்' என்கி
ஹர்ஷப்ரகர்ஷத்தாலே மதித்து ஆடாநின்ற புள் என்றுமாம். ஆச்ரிதவிரோதி நிரஸ
துக்கு ஸர்வேச்வரனுக்குச் செய்யவேண்டுவதில்லை; திருவடி திருத்தோளிலே சலியாம
இருக்குமத்தனையே வேண்டுவது. 'கருடத்வஜன். கருடவாஹநன்' என்று சொல்ல
படுமவனுயிற்று மோக்ஷப்ரதனுவான். [ஆதிமூர்த்திக்கு] (காரணந்து த்யேய:) என்கி
படியே. ஜகத்காரணவஸ்துவேயிறே உபாஸ்யமாவது. மோக்ஷப்ரதனுமாய் ஸர்வநிய
தாவுமான ஸர்வேச்வரனுக்கு. [அடிமை புகுவதுவே] அடிமைபுகுமதுவே கர்த்தவ்யம்
உங்களுக்குச் செய்யவேண்டுவ தொன்றில்லை; அவனுடைமையை அவனுக்காக இசை
அமையும். அவன் இத்தை 'என்னுடைமை' என்றிருக்க. நீங்களும் 'என்னுடைமை
என்றிராதே 'அவனது' என்று இசைய அமையும். அடிமை புகுவது என்கிற இடம்
விதியாய், கண்டீரென்கிற இடம்-அதுவும் செய்து பார்த்திகோளிறே; இனி இவன்
திருவடிகளிலே அடிமைபுகப் பாருங்கோ ளென்கிருர். யயாதிசரிதத்தை பட்டர் வாசி
த்துப்போந்திருக்கச் செய்தே, பிள்ளைவிழுப்பரையரும் ஆப்பான்திருவழுந்தூரரையரு
கூட 'வேதோபப்ரும்ஹணார்த்தமாக ப்ரவ்ருத்தமான ப்ரபந்தங்களில் இது எவ்வ
தத்தை விசதீகரிக்கிறது?' என்று கேட்க. 'க்ஷுத்ர தேவதைகள் தந்தாமை ஆச்ரயித்து
பெற்ருலும் பிறர்பக்கலிலே ஓர் உத்கர்ஷம் கண்டால் அது பொறுக்கமாட்டார்
ளென்றும், ஸர்வேச்வரனே 'பிறர் வாழ்வு நம் வாழ்வு' என்று நினைத்திருப்பானென்று
சொல்லி, ஆனபின்பு, இதர தேவதைகள் ஆச்ரயணீயரன்று. இவனொருவனுமே ஆச்
யணீய னென்னு மர்த்தத்தைச் சொல்லுகிறது' என்று அருளிச்செய்தார். (இமௌஸ்ம
என்று தாழ நிற்கவல்லான் இவனேயிறே. 'யாதவர்கள் முடிவிலே வந்தவாறே வா
கோரையை யிட்டு ஒருவரையொருவர் எறிந்து முடிந்துபோனார்கள்' என்று கேட்
வாறே, 'க்ருஷ்ணன் இவர்கள் விஷயமாக சங்கநிதி பத்ம நிதி தொடக்கமானவற்றை
கொடுவந்து கொடுத்துச் செய்யாதனவில்லை; பின்னையும் முடிவிலே வந்தவாறே இ
படியேயாயிருந்தது; நம்முடைய பகவத்ஸமாச்ரயணத்துக்கும் பலம் அங்ஙனேய
கிறதோ? என்று அஞ்சியிருந்தோம்' என்ன, 'அங்ஙனாகாது; அஞ்சவேண்டா; அவர்கள்
'இவன் என் தோழன், மைத்துனன்' என்று தேஹ ஸம்பந்தத்தைக்கொண்டு விரும்புகை
யாலே அவர்களுக்கு தேஹாவதியாய் விட்டது; நாம் ஸ்வரூபஜ்ஞாநத்தாலே, நித்யனு
ஆத்மாவுக்கு வகுத்த பேறு பெறவேணும் என்று பற்றுகையாலே பேறும் யாவதாத்
பாவியாயிருக்கும்' என்று அருளிச்செய்தார். (7

எட்டாம் பாட்டு. இங்ஙனே யிருக்கச்செய்தேயும், இதரதேவதாஸமாச்ரயண
பண்ணியன்றே மார்க்கண்டேயாதிகள் ஸ்வாபிலஷிதம் பெற்றது என்ன,—ஆகில் அ
இருந்தபடியைக் கேட்கலாகாதோ? என்கிருர்.

புக்கடிமையினால்தன்னைக்கண்ட மார்க்கண்டேயனவனை*
நக்கபிரானுமன்றுய்யக்கொண்டது நாராயணனருளே*
கொக்கலர்தடந்தாழைவேலித் திருக்குருகூரதனுள்*
மிக்கவாதிப்பிரான்நிற்க மற்றைத்தெய்வம்விளம்புதிரே. (8



[புக்கு அடிமையினால்] அடிமையினால் புக்கு. 'ஸர்வேச்வரனுக்கு அடிமை' என்று
கானல்லன்; 'ருத்ரனுக்கு அடிமை' என்று புக்கானாயிற்று. [தன்னைக்கண்ட] காணப்
ருமையாலே தான் இழந்தானல்லன்; [புக்கு இத்யாதி] ஆச்ரயணக்குறையா லிழந்த
ல; காணப்பெருமையால் இழந்ததல்ல. [மார்க்கண்டேயனவனை] மார்க்கண்டேய
னவனை. [நக்கபிரான்] நக்கனென்றது நக்நனென்றபடி. ஸ்வகோஷ்டிக்கு உபகாரகனு
க்கையாலேயாதல், ஜ்ஞாநப்ரதத்வத்தைப் பற்றவாதல் பிரானென்கிறது. மேல்
ாயணனென்கையாலே 'அவனுக்கு சேஷமாமிடத்தில் உன்னோடு என்னோடு வாசி
லை' என்று அவன் திருவடிகளிலே காட்டிக்கொடுத்தா னென்கை. [அன்று உய்யக்
ாண்டது] ஆபத்தசையிலே ரக்ஷித்தது. [நாராயணனருளே] 'நீ நெடுநாள் பசை
டு ஆச்ரயித்தாய்; அவ்வாச்ரயணம் வெறுமன் போயிற்றதாக வொண்ணாது'' என்று
னையழைத்து, 'நானும் உன்னோபாதி ஒருவனை ஆச்ரயித்துக்காண் இப்பதம்பெற்றது.
ரி ஊண் கொடுத்தல், உபதேசங்கொடுத்தலிறே' அவனைக் கொண்டுபோய் ஸர்வேச்
ன் பக்கலிலே காட்டிக் கொடுத்தானாயிற்று. அருளென்கிறவிடம் எல்லாவிபக்தியிலும்
டலாயிருக்கையாலே, அருளாலே யென்னுதல்; அவன் இவனை ரக்ஷித்துக்கொண்டது
வேச்வரன் ப்ரஸாதத்தைப் பண்ணிக்கொடுத் தென்னுதல். [கொக்கலர் இத்யாதி]
க்குப்போலே வெளுத்த நிறத்தையுடைய அலரையுடைத்தா யிருப்பதாய்ப் பெருத்
ந்துள்ள தாழைகளை வேலியாக வுடைத்தாயிருந்துள்ள திருநகரியாயிற்று. நிலத்
வ்பு இருக்கிறபடி. [மிக்கஆதிப்பிரான்நிற்க] ஸர்வாதிகனாய் ஜகத்காரணபூதனான
நிற்க. [மிக்க] சொல்லும்போது கனக்கச் சொல்லி, கிட்டினவாறே குறைந்திரா
ாழிகை. நெடுநாள் ஆச்ரயிப்பித்துக்கொண்டு, பின்பு கார்யகாலத்திலே வந்தவாறே
றே யொருவன் வாசலேறக் கொண்டுபோக வேண்டாதிருக்கை. [மற்றைத் தெய்வம்
ம்புதிரே] ப்ரகாரங்களிலே ஒன்றை ஈச்வரனாகச் சொல்லுகிறிகோளே; அவனுக்கு
காரமாயல்லது ஒன்றுக்கும் வஸ்துத்வமின்றிக்கே யிருக்க, ப்ரகாரியாகச் சொல்லி
ர்த்தப்படுகிறிகோளே கெடுவிகாள்! [விளம்புதிரே] 'வ்யவஹரிக்கைக்கும் யோக்ய
யில்லை' என்று இருக்கிருராயிற்று இவர். ... ... (8)

ஒன்பதாம்பாட்டு. உங்களுடைய உஜ்ஜீவநத்துக்கு அவ்வளவும் செல்லவேணு
ா? அவன் வர்த்திக்கிற திருநகரியை உங்கள் ஜ்ஞாநத்துக்கு விஷயமாக்க அமையும்
கிருர்.

விளம்பும்ஆறுசமயமும் அவையாகியும்மற்றும்தன்பால்*
அளந்துகாண்டற்கரியனாகிய ஆதிப்பிரானமரும்*
வளங்கொள்தண்பணைசூழ்ந்தழகாய திருக்குருகூரதனை*
உளங்கொள்ஞானத்துவைம்மின் உம்மைஉய்யக்கொண்டுபோகுறிலே. (9)

[விளம்பும் ஆறு சமயமும்] சிலவற்றைச் சொல்லாநின்றால், தாங்களும் சில
க்கங்கள் சொல்லாநிற்குமத்தனை போக்கி, ப்ரமாணாநுகூல தர்க்கமல்லாமையாலே
வலம் உக்திஸாரமேயாயிருக்கிற பாஹ்யஸமயங்க ளாறும். அவையாகிறன (சாக்யோ
க்யாக்ஷபாதக்ஷபணகபில பதஞ்சலிமதாநு ஸாரிண:) என்று பாஷ்யகாரர் அருளிச்
ய்தாரிறே. [அவையாகியும் மற்றும்] மற்றும் அவற்றோடொத்த குத்ருஷ்டிகளும்.
மோநிஷ்டாஹி தாஸ ஸ்ம்ருதா:). [தன்பால் இத்யாதி] தன்னளவில் வந்தால் 'இல்லை'
கைக்கும் 'இவ்வளவு' என்று பரிச்சேதிக்க அரிதாயிருக்கும். 'இல்லை' என்னும்
ாதும், வஸ்துவை 'இது' என்று பரிச்சேதிக்க வேணுமே. அதாவது இவனுடைய

ஸ்வரூபரூப குணவிபூதிகள் பாஹ்யகுத்ருஷ்டிகளால் அவிசால்யமாயிருக்கு மென்கை அதுக்கு அடியென்? என்றல், [ஆதிப்பிரான்] (மே மாதா வந்த்யா) என்னவொண் திறே. [அளந்து இத்யாதி] துஸ்தர்க்கங்களால் 'இவ்வளவு' என்று பரிச்சேதிக் வொண்ணுதபடி யிருக்கிற ஜகத்காரணபூதனனவன் விரும்பி வர்த்திக்கிற. [வள கொள் இத்யாதி] ஸம்பத்தையுடைத்தாய் ச்ரமஹரமான நீர்நிலங்களாலே சூழப்பட் கண்டார்க்கு வைத்த கண் வாங்கவொண்ணுதபடி தர்சநீயமான திருநகரியை. [உள கொள் ஞானத்து வைம்மின்] உளம்கொள் ஞானம் மாநஸஜ்ஞாநம். ஜ்ஞாநம் உதித்து பாஹ்யேந்த்ரியங்களாலே பாஹ்யவிஷயத்தை க்ரஹிப்பதுக்குமுன்னே, மாநஸஜ்ஞாந துக்குத் திருநகரியை விஷயமாக்குங்கோள். பஹிர்விஷயமாக்காதே ஜ்ஞாநத்தை ப்ரத் கர்த்த ப்ரவணமாக்கப் பாருங்கோள். என்செய்ய வென்னில், [உம்மை உய்யக்கொண் போகுறிலே] (லெந்தமேநம்) என்கிறபடியே, உந்தாமுடைய ஸத்தைபெற்றுப் போ வேண்டியிருக்கில். (அஸந்நேவ) என்கிறபடியே 'சென்றற்றது' என்றேயிருக்கிற ராயிற்று இவர். (நேயமஸ்தி) என்னுமாபோலே. (மஹாத்மநா) தன்னில் தான் வா சொல்லுமித்தனைபோக்கிப் புறம்பு ஒரு ஒப்புச்சொல்ல வொண்ணுதபடியான பெரும ளோடே. ... ... ... ... (9)

பத்தாம்பாட்டு. தன் ஐச்வர்யத்தி லொன்றுங் குறையாமல் வந்து திருநகரியிலே நின்றருளின பொலிந்து நின்ற பிரானுக்கு அடிமை செய்கையே உசிதம் என்கிறர்.

உறுவதாவதெத்தேவும் எவ்வுலகங்களும் மற்றுந்தன்பால்*
மறுவின் மூர்த்தியோடொத்து இத்தனையும் நின்றவண்ணம் நிற்கவே*
செறுவிற் செந்நெல் கரும்பொடோங்கு திருக்குருகூரதனுள்*
குறியமாணுருவாகிய நீள்குடக்கூத்தனுக்காட் செய்வதே* (10)

[உறுவதாவது இத்யாதி] நீள்குடக்கூத்தனுக்கு ஆட்செய்வதே உறுவதாவ உறுவதும் இது, ஆவதும் இது, சீரியதும் இது, ஸாதகமும் இது வென்னுதல்; உறு தாவது இதுவே யென்னுதல். [எத்தேவும் இத்யாதி] எல்லாத் தேவதைகளும் தேவதைகளுக்கு போகஸ்தாநமான எல்லா லோகங்களும். [மற்றும்] மற்றுமுண்டான சேதநாசேதநங்களும். [தன்பால் மறுவில் மூர்த்தியோடொத்து] தன்னிடத்து வந்தா மறுவில்லாதபடி மூர்த்தியோடு ஒத்து. இவை மூர்த்தியாமிடத்தில் அப்ராக்ருதமான விக்ரஹத்தோபாதி குறைவின்றிக்கேயிருக்கை. மறுவாகிறது குற்றம், அதாவது-குறைவு அதின்றிக்கே யிருக்கை, ப்ருதக்ஸ்தித்யாதிகளின்றிக்கே யிருக்கை. அன்றிக்கே. மறுவை யுடைத்தான மூர்த்தியுண்டு-ஸ்ரீவத்ஸத்தை யுடைத்தான விக்ரஹம்; அத்தோடொத் என்னுதல். அன்றிக்கே, மறுவில்மூர்த்தியுண்டு ஹேயப்ரத்யநீகமான விக்ரஹம் அத்தோடொத்து என்னுதல். இவை சரீரத்தோடு ஒக்கையாவதென்? என்னில்; ப்ருத ஸ்தித்யநர்ஹாதாராதேயபாவ, நியந்த்ருநியாம்யபாவ, சேஷசேஷிபாவமான சரீ லக்ஷணங்கள் இவற்றுக்கு உண்டாகையாலே. வ்ருக்ஷத்திலே தேவதத்தன் நின்றல் அ அவனுக்கு சரீரமாகாதிறே, இங்கு அங்ஙனன்றிக்கே யிருக்கை. [இத்தனையும் இத்யாதி] இவையடங்கலும் இருந்தபடியே தன்பக்கலிலே நிற்க. தன்னையொழிந்த ஸகலபதார் தங்களும் தனக்கு சரீரதயா சேஷமாம்படியிருக்கிற இவ்வைச்வர்யத்தில் ஒன்றும் குறை யாதபடி வந்து நிற்கை. உபயவிபூதி யுக்தனுகையால் வந்த ஐச்வர்யமடையத் தோற்று படிக்கு ஈடாகவாயிற்று இங்கு வந்து நிற்கிறது. ராஜபுத்ரன் ஒரு ஒலியலை உடுத்து தாழவிருந்தாலும் ஐச்வர்யத்திற் குறைந்து தோற்றுதிறே. [செறுவில் இத்யாதி] செ



ல் செந்நெற்களானவை கரும்பொடொக்க ஓங்கா நின்றுள்ள திருக்குருகூரதனுள்: வூரில் பதார்த்தங்களில் ஒன்றிலொன்று குறைந்திருப்பதில்லை; தேசவிசேஷத்தில் லாரும் ஒருபடிப்பட்டிருக்குமாபோலே, [குறிய] கோடியைக் காணியாக்கிற லே, கண்ணுலே முகக்கலாயிருக்கும்படி வடிவை அமைத்தபடி. [மாணுருவாகிய] டபோதோடு இடாதபோதோடு வாசியற முகமலர்ந்து போம்படியாக இரப்பிலே ம்பேறினபடி. [நீள்குடக்கூத்தனுக்கு] குடக்கூத்தாடி விட்டபின்பும், அம்மநோ ரி சேஷ்டிதத்தைப் பிற்பட்ட காலத்திற் கேட்டார்க்கும் ஸமகாலத்திலே கண்டாற் லே ப்ரீதிபிறக்கும்படியாயிற்றுக் குடக்கூத்தாடிற்று. [ஆள்செய்வதே] அச்சேஷ்டி தானே அடிமையிலே மூட்டும்; நீங்கள் இசையுமத்தனையே வேண்டுவது. ... (10)

நிகமத்தில், இத்திருவாய்மொழி கற்றூர்க்குப் பரமபதம் ஸுலபமென்கிறர்,

ஆட்செய்தாழிப்பிரானைச் சேர்ந்தவன் வண்குருகூர்நகரான்*
நாட்கமழ்மகிழ்மாலைமார்பினன் மாறன்சடகோபன்*
வேட்கையாற்சொன்னபாடல் ஆயிரத்துள் இப்பத்தும்வல்லார்*
மீட்சியின்றிவைகுந்தமாநகர் மற்றதுகையதுவே* (11)

[ஆட்செய்து ஆழிப்பிரானைச் சேர்ந்தவன்] அடிமை செய்து ஸர்வேச்வரனைக் டினவர். முறையிலே ஸர்வேச்வரனைப்பற்றினவராயிற்று இவர். அதாவது (விசித்ரா ஹஸம்பத்திரீச்வராய) என்கிறபடியே, அவன் கொடுத்த உபகரணங்களைக் ாண்டு அப்ராப்த விஷயங்களிலே போகாதே. "தந்த நீ கொண்டாக்கினை" என்கிற யே வகுத்த விஷயத்துக்கே சேஷமாக்கிக்கொண்டு கிட்டுகை, ஆட்கொள்ளுகைக்கு ாயம் அவன் கையிலே உண்டுபோலே காணும். தான் வ்ருத்தவானுய்க் காணும் வரை வ்ருத்தியிலே அந்வயிப்பித்தது. கையில் திருவாழி சேர்ந்தாற்போலேயாயிற்று வரும் சேர்ந்தபடி. [சேர்ந்த] கெடுமரக்கலம் கரைசேர்ந்தாற்போலே. ஆட்செய்கை வது அடிமை செய்கை. அடிமைதான் த்ரிவிதம் மாநஸ வாசிக காயிகங்கள். இவற்றில், நஸகாயிகங்களுக்கு ஆளல்லர்; என்றிய வென்னில்;—"காலாழும் நெஞ்சழியும் கண் ழலும்" என்கையாலே. இனி, வாசிகமொன்றுமேயானல், வாசிகமாகத் திருவாய் ாழிபாடி அடிமை செய்தா ரென்கிறதோ? என்னில்:—அன்று, அப்படியாமன்று இப் சுரம் "முனியே நான்முக"னிலே யாகவேணும்: இல்லையாகில், ஸர்வஸங்க்ரஹமான தல் திருவாய்மொழியிலேயாகிலும் ஆகவேணும்: இல்லையாகில் இவர் வாசிகமாக டிமை செய்த "புகழுநல்லொருவ"னிலேயாகப் பெறில் முக்யம். ஆனல், தேவதாங் பரத்வ நிரஸநபூர்வகமாக ஸர்வேச்வரனுடைய பரத்வத்தை அருளிச் செய்கையாலே னுலோ வென்னில்: அதுவாகில், முதல் திருவாய்மொழியிலேயாக அமையும், பரத்வ ர்ணயத்திலே பரோபதேசமுமாகையாலேயானுலோ வென்னில்;—அதுவாகில், "திண் ன்வீட்"டிலே யாதல், "அணைவதரவணை"யிலே யாதலாக அமையும். ஆனல், அர்ச் வதாரத்திலே பரத்வம் அருளிச் செய்கையாலே யானுலோ வென்னில்;—அதுவு மாண்ணுது: அது "செய்யதாமரைக் கண்ண"னிலே யாக அமையும். பரோபதேசம் ண்ணுகையாலே சொல்லிற்றுனுலோ வென்னில்;--அதுவு மொண்ணுது; "வீடுமின் ற்றவும்" தொடங்கிப் பல விடங்களிலும் பரோபதேசம் பண்ணினர்; அவற்றிலுமாகப் பற்றதில்லை. ஆனல், ஏதாவதென்னில்;--இவ் "ஒன்றுந்தே"விலே, "திருக்குருகூர ளுள் பரன்திறமன்றிப் பல்லுலகீர் தெய்வம்மற்றில்லை பேசுமினே" என்று பொலிந்து ன்றபிரானே ஸர்வஸ்மாத்பரனென்று இவர் அருளிச்செய்யக் கேட்டு, "கபாலநன

மோக்கத்துக்கண்டுகொண்மின்'' என்னக் கண்டு, ஜகத்தாகத் திருந்தி ஸ்ரீவைஷ்ணவ
களாயிற்று; இவர்தாம் அவர்களுக்கு மங்களாசாஸநம் பண்ணும்படியிறே அவர்கள்தா
திருந்தினபடி. ''பொலிக பொலிக'' என்று இதுக்கென்ன ஒரு திருவாய்மொழி நே
கிருரிறே. ஸர்வேச்வரன் அவதரித்துத் திருத்தப் பார்த்தவிடத்தும் திருந்தாத ஸ
ஸாரத்திலே இவர் திருத்தத் திருந்தினபடி: இனி இவர்க்குத் தத்வநிர்ணயம் பண்
வேண்டாதபடி ''இடங்கொள் சமயத்தையெல்லா மெடுத்துக்களைவனபோலே தட
கடற்பள்ளிப் பெருமான் தன்னுடைப் பூதங்களே''யாம்படி (யாயிற்று. இப்ப
திருத்துகையாலே ஆட்செய் தாழிப்பிரானைச் சேர்ந்தவ னென்கிருர். [வண்குருக
நகரான்] இந்நன்மைக்கு அடி அவ்வூரில் பிறப்பாயிற்று. [நாள்கமழ் மகிழ்மாலை ம
பினன்] ''நண்ணுதார் முறுவலிப்ப''விலே ஸம்ஸாரிகள் படுகிற க்லேசத்தை அநுஸ
தித்து, சாத்தின மாலையும் வாடியிருந்தது முன்பு; இப்போது பகவத்பரத்வத்தை உ
பாதித்து, 'இனி இவர்களுக்கு ஒரு குறையில்லை' என்று தேறினபின்பு, இட்ட மாலையு
செவ்விபெற்றதாயிற்று. [மாறன்சடகோபன்] பகவத்ப்ராப்தி ப்ரதிபந்தகமானவற்று
கெல்லாம் ம்ருத்யுவானவர். [வேட்கை இத்யாதி] சிலர் தாந்தராய் வந்து கேட்
சொல்லுகிருரன்றே; தம்முடைய அபிநிவேசாதிசயத்தாலே அருளிச் செய்த பாடலாயிர
திலும் இப்பத்தையும் வல்லார் கையது, மீட்சியின்றி வைகுந்தமாநகர். (மற்றத
லீலாவிபூதி) இரண்டும் இவர்கள் கையது. மற்று என்கிற இது ஒரு அவ்யயமா
புநராவ்ருத்தியில்லாத பரமபதவிபூதியானது அவர்கள்கையது. இப்பத்தும்பத்தா
அவர்கள்கையது பரமபதம். அன்றிக்கே, பகவத்பரத்வஜ்ஞாநமே ப்ரயோஜந
ஜ்ஞாநாநுரூபமான தேசமும் அவர்களுக்கு ஸுலபம். மற்றதான வைகுந்தமாநகருண்
ஸம்ஸாரத்துக்கு எதிர்த்தட்டானது, அது அவர்கள் கையது என்னவுமாம், ... (1

திருவாய்மொழி நூற்றந்தாதி }
ஒன்றுமிலைத்தேவு இவ்வுலகம்படைத்தமால்*
அன்றியெனவாருமறியவே* — நன்றாக
மூதலித்துப்பேசியருள் மொய்ம்மகிழோன்தாள்தொழவே*
காதலிக்குமென்னுடைய கை. (40

ஆழ்வார் திருவடிகளே சரணம்,

எம்பெருமானார் திருவடிகளே சரணம், சீயர் திருவடிகளே சரணம்.

---



Regd. No. M, 597. ஸ்ரீரா

## ஸத்க்ரந்த ப்ரகாசந ஸபையின் மூலமாக வெளிவந்தவை

| | | ரு. | அ. | | |
|---|---|---|---|---|---|
| 1. | பூர்வாசார்ய வைபவம் | 1 | 8 | 21. | திவ்யப்ரபந்தக்கண்ணடி |
| 2. | ஆசார்ய ஹ்ருதயஸாரம் | 4 | 0 | 22. | விஷ்ணு ஸஹஸ்ரநாம வுரை |
| 3. | திவ்யப்ரபந்தஸாரத்திரட்டு | 1 | 0 | 23. | ஸ்ரீதேசிகரஹஸ்யமாலை 1 to |
| 4. | பன்னிரு திங்களநுபவம் | 2 | 0 | 24. | திருவாய்மொழி இரண்டாம் |
| 5. | நித்யாநுஸந்தானம் மூலம் | 1 | 0 | | திவ்யார்த்த தீபிகையு |
| 6. | ஷை உரை | 2 | 8 | 25. | ,, மூன்றும்பத்துதிவ்யார் |
| 7. | பரந்த ரஹஸ்யம் மாணிக்கமாலை | 1 | 0 | | தீபிகையு |
| 8. | ஸ்ரீராமாநுஜன் முதல் தொகுதி | 4 | 0 | 26. | ஆசார்யஹ்ருதய வியாக்கியா |
| 9. | கத்யத்ரய உரை | 1 | 2 | | (மணவாளமாமுனிகளருளிய |
| 10. | திருப்பாவையுரை | 1 | 4 | 27. | ஸ்ரீராமாநுஜன் தொகுதி 2,3 |
| 11-20 | பகவத்விஷயம் ஈடு பூர்த்தியாக | 20 | 0 | | |

இவை கிடைக்குமிடம்:—

P. B. அண்ணங்கராசாரியர், காஞ்சீபுரம்.

கராலபாடி ராதாகிருஷ்ணய்யா, 147, அண்ணுபிள்ளை தெரு, மத

G. ரங்கைய நாயுடு, 37, ஸாமிபண்டாரம் தெரு, சிந்தாதிரிப்பேட்டை

(இவர் சென்னையில் பிரசாரம் செய்ய நியமிக்கப்பட்டவர்.)

If un-delivered please return to :

**P. B. Annangaracharyar, Kancheepur**

36. Sri S.R.S. Raghavan, Esq.,
5, Old Mill Road,
NEW DELHI.




Edited and Published by P. B. Annangaracharya Swami,
for Madras Sathgrantha Prakasana Sabha,
Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Pre
Sannidhi Street, Little Kancheepuram.

